ஆ.—மல்லிகைகமழ் தென்றல் முதலான பதார்த்தங்கள் என்னை வாயியா நின்றன ; ஆஸ்சர்யமான ஸௌந்தர்யாதி குணங்களை யுடையனாயிருந்த எம்பெருமானைப் புல்கி அதுவே யாரகமாயிருந்த இம்முலைகளையுந் தோள்களையும் கொண்டு புகலிடமறிகிலோம் ; முடிவுதோம்!' என்று கூப்பிடுகிறாள்.

ஒ.—முதற்பாட்டில், ஸந்த்யாகாலத்தில் தென்றல் தொடக்கமான பதார்த்தங்கள் தனித்தனியே தனக்கு வாயகமாகிறபடியை அருளிச்செய்கிறார்.

[மல்லிகையென்று தொடங்கி] - வெறுப்புறத்திலே பொறுக்கவொண்ணாத தென்றலானது நஞ்சூட்டினாற்போலே மல்லிகையின்பரிமளத்தோடே கூடவந்து ஈரா நின்றது. அழகிய குறிஞ்சியோடேகூடின இசையானது துளையாநின்றது ; அஸ்தமியா நின்றுள்ள ஆதித்யனையுடைய ஸந்த்யையும் வந்து மோஹிப்பியாநின்றது; சிவந்து அழகிய மேகங்கள் ஶோஷித்துப் போகடாநின்றன. 'ஆல்' என்றும், 'ஓ' என்றும் மிகவும் நோவுபட்டமைக்குத் தனித்தனி ஸூசகங்கள். [அல்லியந்தாமரைக்கண்ணனென்று மேலுக்கு] - இடைப்பிள்ளைகளைத் தன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே தோற்பித்தாற்போலே தன்திருக்கண்களில் அழகைக்காட்டி என்னை அடிமைகொண்டு என்னோடே அத்யாஸ்சர்யமாம்படி பரிமாறி அத்தாலே மேனாணித்திருந்தவனாலே புல்கப்பட்ட முலைகளையும் தோள்களையும் கொண்டு தென்றல்முதலான பதார்த்தங்கள் நலியாதபடி புகுகைக்கிடம் காண்கிறிலோம் ; இத்தசையில் இதுக்கு ரக்ஷகனானவனும் வாராதே தனிமைப்படாநின்றோம்.

ப —முதற்பாட்டில், ஸந்த்யைவேளையில் தென்றல்தொடக்கமான பதார்த்தங்கள் நலியாநின்றன ; நிரதிஶயபோக்யபூதனான க்ருஷ்ணன் விரும்பின அவயவங்களைக்கொண்டு ஒதுங்க இடங்காண்கிறிலோமென்று கூப்பிடுகிறாள்.

மல்லிகைகமழ் - மல்லிகையிற் பரிமளத்தையுடைத்தான, தென்றல் - தென்றலானது, ஈரும் - நஞ்சூட்டின வாள்போலே ஸர்வதோமுகமாக ஈராநின்றது ; வண் - ஶ்ராவ்யமாய் அவஶ்யஹ்த்ஸிதக்ராஹ்யமான, குறிஞ்சியிசை - குறிஞ்சியாகிற பண்ணையுடைத்தான இசையானது, தவழும் - அந்தர்க்கதமாகத் துளையாநின்றது ; செல்-அஸ்தமிபோநின்றவனான, கதிர் - ஆதித்யனையுடைத்தான, மாலையும்—ஸந்த்யாவேளையானது, மயக்கும் - (கூப்பிட்டாற்றவொண்ணாதவகைஅறிவழியும்படி) மோஹிப்பியாநின்றது ; செக்கர் - ஸந்த்யையில் செக்கர்நிறத்தையுடைத்தான, நல் - தர்ஶநீயமாயுள்ள, மேகங்கள் - மேகங்களானவை, சிதைக்கும் - * பொன்னுடுத்தவாடை யுடையவன் வடிவுக்கு ஸ்மாரகமாய்க்கொண்டு ஶரீரத்தைச் செதுக்காநின்றது ; (இப்படி நாலுபாடும் விரோதமானபின்பு), அல்லி - விகஸிதமாய், அம் - தர்ஶநீயமான, தாமரைக்கண்ணன் - தாமரைப்பூப்போலே யிருக்கிற கண்ணழகை யுடையனாய், எம்மான் - (அத்தாலே "ஜிதம்" என்னும்படி நம்மைத் தோற்பித்த) ஸ்வாமியாய், ஆயர்களேறு - ஸஜாதீயரான ஶோபரும் ஈடுபடும்படியான செருக்கையுடையனாய், அரியேறு - (ஸ்த்ரீ பும் விபாகமற இப்படி யழிக்கைபாலே) ஸிம்ஹஶ்ரேஷ்டம்போலே மேனாணித்திருப்பானாய், எம்பாரோன் - (ஸம்ஶ்லேஷதஶையில்தாழநின்று நம்மோடேபரிமாறும்) ஆஸ்சர்ய சேஷ்டிதங்களை யுடையவன்,புல்கிய-(அத்யந்தாபிநிவிஷ்டனாய்க்கொண்டு) ஸம்ஶ்லேஷித்த, முலைகளும் - முலைகளையும், தோளும் - தோள்களையும், கொண்டு - , தமியம் - (அவனைப்

பிரிந்து) தனிமைப்பட்ட நாம், புகலிடம் - ஒதுங்கவிடம், அறிகிலம் - அறிகிறிலோம். ரக்ஷகனானவன் அஸந்நிஹிதனானான்; நாம் அஸஹாயரானோம்; சுற்றும் முற்றும் பாதகமாய்த்து; அவன் விரும்பின வஸ்துவை நோக்கிக் கொடுக்க விரகறிகிறிலோம் என்று கருத்து. தவர்தல் - துளைத்தல். சிதைக்கை - செதுக்குகை. ஆலும் ஓவும் விஷாதாதிஶயஸூசகமான வசைகள். அடிதோறும் கூப்பிட்டது, ஒரொன்றால் வந்த ஆர்த்த்யதிஶயத்தாலே.

இ.—முதற்பாட்டில், ஸந்த்யாகாலத்தில் தென்றல் தொடக்கமான பதார்த்தங்கள் தனித்தனியே தனக்கு பாதகமாகிறபடியைச் சொல்லுகிறாள்.

[மல்லிகை கமழ்தென்றல்] - இவள் ஆர் கேட்கக் கூப்பிடுகிறாள்! வெறும்புறத்திலே நலியவற்றான தென்றல் மல்லிகையினுடைய பரிமளத்தை ஏறட்டுக்கொண்டு வாராநின்றது. வ்யபரிகரமான பத்ரத்திலே நஞ்சூட்டினாற்போலேயாய்த்து தென்றல் பரிமளத்தைக்கொண்டு வருகிறபடி. ப்ராணேந்த்ரியத்வாரத்தாலும் நலியாநின்றது. கண்ணுக்கு விஷயமாயிருக்கவொண்ணாதபடி இராப்படை யேறுவாரைப்போலே உடம்பிலேபடக் காண்கிறவித்தனை. இத்தென்றலுக்கு, கண்டவிடமெங்கும் வாயாயிராநின்றது. [ஈருமாலோ] - பண்டேபிரிவாலே சென்றற்றிருக்கிற உடம்பைப் பலகை பலகையாக ஈராநின்றது. "வக்ஷஸ்ஸம்ஹ்ருஷ்ணவஹம் ஶிவம் ஶோகவிநாஶநம் | யந்த்ரக்ஷணே ஸேவதே தேஹ்ரீவந்நரோதஸ:"—இருவராயிருப்பார் காற்றைத் தேடிப் படுக்கை படாநிற்க இவளொருத்திக்கு மாய்த்து பாதகமாகிறது; "யாநி ஸ்மரமணீயாநி தயா ஸஹ ஸவந்தி மே | தாந்யேவாரமணீயாநி ஜீவதோ மே தயா விநா". [வண்குறிஞ்சியிசைதவழுமாலோ] - அழகிய குறிஞ்சியிசையானது துளையாநின்றது. காற்றீர்ந்து போகட்டபுண்ணின்மேலே துளைத்துப் போகடாநின்றது. தென்றல் புறம்பே நலிகிறவித்தனை; இசை, செவிவழியே உள்ளேபுக்கு நலியாநின்றது. இசைக்கெவ்வளவு செவிப்பாடுண்டு, அவ்வளவு பாதகமாமித்தனையிறே. அவள் கூடவிருந்தபோது எவ்வளவு போக்யமாயிருக்கும், வ்யதிரேகத்தில் அவ்வளவும் நலியுமிறே. குறிஞ்சியும் தென்றலும் க்ருதஸங்கேதைகளாய் வந்து ஒன்று அதிகரித்த கார்யத்தின் ஶேஷத்தை ஒன்று செய்யாநின்றது; 'நற்கொலையாகவொண்ணாது: உயிர்க்கொலையாகவேணும்' நீ இவ்வளவுசெய், நான் இவ்வளவு செய்கிறேன்' என்பாரைப்போலே. [செல்கதிர்மாலையும் மயக்குமாலோ] - செல்லப்பட்டிருக்குள்ள கதிரையுடைத்தான மாலையானது மயங்கப் பண்ணுகின்றது. அஸ்தமியாநின்றுள்ள ஆதித்யனையுடைய ஸந்த்யையானது மோஹிப்பியாநின்றது. புடைவையை வாயிலேகொடுத்து நலிவாரைப்போலே ஓடுகிற வ்யஸநத்துக்குப் போக்குவிட்டுக் கூப்பிடவொண்ணாதபடி உணர்த்தியழியும்படி மோஹிப்பியாநின்றது. [செக்கர் நன்மேகங்கள் சிதைக்குமாலோ] - சிவந்தழகிதான மேகங்கள் சேதித்துப்போகடாநின்றது. ஸந்த்யாராகத்தையும் ஶ்யாமமான நிறத்தையுமுடைய மேகங்கள் அவனுடைய அவயவஶோபைக்கும் நிறத்துக்கும் போலியாய் நலியாநின்றன. கீழ்ச்சொன்ன பாதகபதார்த்தங்கள் ஆஶ்ரயங்கிடக்கவோ நலிவது என்று ஶரீரத்தைச்சேதுப் போகடாநின்றன. [அல்லி இத்யாதி] - இவற்றை இன்னதாகிறதென்? அவன்தான் முன்னே நாம் முடிகைக்கன்றோ கலந்துபோகின்றது? ஸர்வமும் பாதகமாம்படி முன்னே புகலறுத்தான் அவனன்றோ? [அல்லியுந் தாமரைக்கண்ணன்] - அல்லியையுடைத்தாய் அழகிதான தாமரைபோலேயிருந்த திருக்கண்களையுடையவன்;

முதலுறவுபண்ணுவது கண்ணாலேயிறே. த்ருஷ்டிபந்தம் பிறந்தாலிறே ஸம்ஶ்லேஷமுண்டாவது. [எம்மான்]-அவ்வழகாலே என்னை அநந்யார்ஹையாக்கினவன். [ஆயர்களேறு] - அவ்வழகாலே இடையரைத் தோற்பித்தாற்போலே தன்னோடு ஒத்த ஆண்களைத் தோற்பிக்குமவன், பெண்பிறந்தாரை நோவுபடுத்தச் சொல்லவேண்டாவிறே. "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" எனகிறபடியே வயிரவுருக்காயிறே அழகிருப்பது. [அரியேறு] - என்னை அநந்யார்ஹையாக்கி என்னோடே கலந்து அத்தாலே பெறும்பேறு பெற்றானுப் மேனாணிப்புத் தோற்றவிருக்கிறபடி. ஸிம்ஹஶ்ரேஷ்டம். [எம்மாயோன்] - ஸம்ஶ்லேஷதஶையில் காலைக் கையைப்பிடித்துத் தாழநின்று பரிமாறினவன். போகின்றவநந்தரம்தரிப்பு அரிதாம்படியாய்த்துப் பரிமாறிற்று. [புல்லிய முலைகளுந் தோளுங்கொண்டு] - அவன்வந்து ஸம்ஶ்லேஷிக்கிறபோது ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்துக்கு க்ஷமமன்றிக்கேயொழிந்தாளாய்த்து; அநுபவிக்கவிழிந்ததுறையும் இளைப்பாறினவிடமுமிருக்கிறபடி. புல்லியவென்று, கலக்கிறபோது அவனுக்கு முலைகளிலும் தோள்களிலும் உண்டான அலமாப்பைச்சொல்லிற்று. [புகலிடமறிகிலம்] - வ்யதிரேகத்தில் தென்றல்முதலான பதார்த்தங்களைத் தப்பிச்சென்று புகுகைக்கிடம் காண்கிறிலோம். "க்ஷாமகாலத்தில் பஹுப்ரஜராயிருப்பார், தங்கள்பசிகிடக்க ப்ரஜைகள் அலைப்புக்கு அலந்து புகலிடமறியாதாற்போலே, நான் ஜீவித்தபடி ஜீவிக்கிறேன்; இவற்றைக்கொண்டு புகுமிடங்காண்கிறிலேன்" என்கிறார். [தமியமாலோ] - இத்தசையில் ரக்ஷகனானவனும் வாராமைபாலே தனிமைப்படாநின்றோம். ஆஶ்வாஸகரமான தென்றல் முதலான பதார்த்தங்கள் பாதகமாகாநின்றால், அர்ஜுநனை நோக்கி ஜயத்ரதன் விட்டஶக்தியை மார்விலே ஏற்றாற்போலே இத்தசைக்கு உதவவேண்டாவோ? "நாஸ்ய ஸஹாய இதி ஸஹிதோ விஜ்ஞாத" என்று தம்தனிமையில் தம்பியாரிலும் உண்டாய்த்து ; அதுவுமில்லை இங்கு.

ஈடு.—முதற்பாட்டு. ஸந்த்யாகாலத்தில் தென்றல்தொடக்கமான பதார்த்தங்கள் தனித்தனியே தனக்கு பாதகமாகிறபடியைச் சொல்லுகிறாள்.

[மல்லிகை] - "மல்லிகை" என்றுதொடங்கி "செக்கர்நன்மேகங்கள் சிதைக்குமாலோ" என்னுமளவும் இவள் ஆர்கேட்கக் கூப்பிடுகிறாள்தான்? [மல்லிகைகமழ் தென்றல்] - வெறும்புறத்திலேநலியவற்றான தென்றல், அதுக்குமேலே மல்லிகையின் பரிமளத்தை எறட்டுக்கொண்டு வாராநின்றது. வத்யபரிகரமான பத்ரத்திலே நஞ்சுஊட்டினாற்போலே யாய்த்து, தென்றல் பரிமளத்தைக் கொண்டுவருகிறபடி. அவன் கூடவிருந்தபோது அநுகூலமான பதார்த்தங்களடைய இப்போது, பாதகமா யிருக்கிறதிறே. "யாநி ஸ்ம ரமணீயாநி தயா ஸஹ பவந்தி மே । தாந்யேவாரமணீயாநி ஜீவதோ மே தயா விநா," (யாநிஸ்மரமணீயாநி தயாஸஹபவந்திமே | தாந்யேவாரமணீயாநி ஜீவதோ

முதற்பாட்டு - மல்லிகை இத்யாதி பூர்வார்த்தத்தையெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை - ஸந்த்யாகாலத்தில் இத்யாதி. தென்றல் முதலானவை பாதிக்கிறதென்று ஒருக்ரியையாகச் சொல்லாதே, "ஈருமாலோ, தவருமாலோ" என்று ப்ரத்யேகம் க்ரியையாயிருக்கையாலே - தனித்தனியே என்றருளிச்செய்தது.

வ்யாக்யாதாவினீடுபாடு - மல்லிகை இத்யாதி. "மல்லிகைகமழ்தென்றல்" என்றதுக்கு பாவம் - வெறும்புறத்திலே இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - வத்ய இத்யாதி. பத்ரம் - ஆயுதம். அநுகூலமான தென்றல் பாதகமாவானென் என்ன-அவன்கூட இத்யாதி. இப்படி பாதகமான விடமுண்டோவென்ன - யாநிஸ்ம இத்யாதி. அவை யெவையென்ன - ஏஷபுஷ்பவஹோ இத்

மேதயாவிநா) "ஏஷ புஷ்பவஹோ வாயுஸ் ஸுக ஸ்பர்சோ ஹிமாவஹ: । தாம் விசிந்தயத: காந்தாம் பாவக ப்ரதிமோ மம," (ஏஷபுஷ்பவஹோவாயுஸ்ஸுக ஸ்பர்சோஹிமாவஹ: । தாம்விசிந்தயத:காந்தாம் பாவகப்ரதிமோமம,) "ஸதா ஸுகமஹம் மந்யே யம் புரா ஸஹ ஸீதயா । மாருதஸ் ஸவிநா ஸீதாம் சோகஸஞ்ஜநகோ மம." (ஸதாஸுகமஹம்மந்யே யம்புராஸஹஸீதயா | மாருதஸ்ஸவிநாஸீதாம்சோகஸஞ்ஜநகோமம.) "தந்யா லக்ஷ்மண ஸேவந்தே பம்போபவநமாருதம்" (தந்யாலக்ஷ்மணஸேவந்தே பம்போபவநமாருதம்) என்று கூப்பிடுவா னவனிறே; (இருவ ராயிருப்பார் காற்றைத்தேடிப் படுக்கைபடாநிற்க,) "இக்காலமிவ்வூர் பனிப்பியல்வெல் லாம் தவிர்ந்தெரிவீசும்" என்னுமாபோலே, இவரோருவர்க்குமேயாய்த்து பாதகமாகிறது. [மல்லிகைகமழ்தென்றல்] - க்ராணேந்த்ரியத்துக்கும் பாதகமாய், ஸ்பர்சேந்த்ரியத்தை யும் அழியாநின்றது. இராப்படை ஏறுவாரைப்போலே உடம்பிலேபடக் காணுமித்தனை போக்கி, கண்ணுக்குத்தோற்றுதாய்த்து; கண்டு தப்பவொண்ணுது. இத்தென்றலுக்கு, கண்டவிடமெங்கும் வாயாயிராநின்றது. [ஈருமாலோ] - பண்டே பிரிவாலேசென்றற்றிருக் கிற உடம்பை, பலகைபலகையாக ஈராநின்றது. [வண்குறிஞ்சியிசைதவழுமாலோ] - அழ கிய குறிஞ்சியிசையானது துளையாநின்றது. காற்றுஈர்ந்துபோகட்ட புண்ணின்மேலே துளைத்துப் போகடாநின்றது: தென்றல், புறம்பே நலிகிறவித்தனை ; இசை, செவிவழியே யுள்ளேபுகுந்து நலியாநின்றது. [வண்குறிஞ்சி] - இசைக்குஎவ்வளவு ரசவிப்பாடுண்டு, அவ்வளவும் பாதகமாமித்தனையிறே. அவன் கூடவிருந்தபோது எவ்வளவு போக்யமா யிருக்கும் ? வ்யதிரேகத்தில் அவ்வளவும் நலியுமிறே. குறிஞ்சியும் தென்றலும் கூடி க்ருத

யாதி ப்ரமாணத்வயம். காற்று பாதகமென்னுமதுக்கு இவர் ஸ்ரீஸூக்தி-இக்காலம் இத்யாதி. வ்யாக் யாதாவினீடுபாடு - தந்யா இத்யாதி. "யாநி ஸ்மரணீயாநி மயா ஸஹ வநே தவ । தாநி ஸ்மரணீயாநி ஜீவதோ மே த்வயா விநா" (கக-௭) "ஏஷ புஷ்பவஹோ வாயுஸ் ஸுகஸ்பர்சோ ஹிமாவஹ: । தாம் விசிந்தயத: காந்தாம் பாவகப்ரதிமோ மம," (௫௨ - ௭) "ஸதா ஸுகமஹம் மந்யே யம் புரா ஸஹ ஸீதயா । மாருதஸ் ஸவிநா ஸீதாம் சோகஸஞ்ஜநகோ மம," (௫௩-௭), "பத்மஸௌகந்திகவஹம் சிவம் சோகவிநாசநம் தந்யா லக்ஷ்மண ஸேவந்தே பம்போபவநமாருதம்" (௱௪௭) இதிகிஷ்கிந்தாகாண்டே ப்ரதமே. திருவிருத்தம் அஞ்சாம்பாட்டு, "பனிப்பியல்வாகவுடையதண்வாடையிக்காலமிவ்வூர், பனிப்பியல்வெல்லாந்தவிர்ந்தெரி வீசும் -" குளிர்த்தியை ஸ்வபாவமாகவுடைத்தான மந்தமாருதம், இக்காலத்திலே இத்தேசத்திலே குளிர்ந்தஸ்வபாவமெல்லாம் தவிர்ந்து எரிவீசாநிற்குமென்றபடி- கூப்பிடுவோனவனிறே; "ஆயிருக்க, இவள் கூப்பிடுகிறுள்" என்று கூட்டுவது. "மல்லிகைகமழ்தென்றல்" என்றத்தால் ஸூசிதம் - க்ராணேந்த்ரியத்துக்கும் இத்யாதி. பாதகமென்றறிந்தால் தப்புகிறதுக்கென்னென்ன - இராப் படை இத்யாதி. அமூர்த்தமானவாயு ஈருகையாலே இதுக்குத் தப்பவொண்ணுதென்றபடி. "ஈரும்" என்றதுக்கு பாவம் - இத்தென்றலுக்கு இத்யாதி. ஈருகை - அறுக்கை. கண்டவிடமெங்கும் வாயாயிரா நின்றது என்றது - ஸ்பர்சம் ஸர்வாங்கீணமாகையாலே. "ஈரும்" என்றதுக்கு பாவாந்தரம்- பண்டே இத்யாதி. கீழிற்பதத்தையுங்கூட்டி "தவழும்" என்றதுக்கு பாவம் - காற்றுஈர்ந்து இத் யாதி. தவழுகை - துளைக்கை. இது தென்றலைப்பற்றவும் க்ரூரமென்கிறுர் - தென்றல் புறம்பே இத்யாதி. * வண்மைக்கர்த்தம் - இசைக்கு இத்யாதி. விவரணம் - அவன்கூட இத்யாதி. செவிப் பாடு - செவியிலே புகுருகை ; போக்யதை யென்றபடி. "மல்லிகை" என்றுதொடங்கி இவ்வளவும் பதச்சேர்த்திக்கு பாவமாதல்; "தென்றலீரும், குறிஞ்சிதவழும்" என்றதுக்கு பாவமாதல் - குறிஞ்

ஸங்கேதிகளாய்வந்து, ஒன்றுஅதிகரித்த கார்யத்தின் ஶேஷத்தை ஒன்று செய்யாநின்றது. “நற்கொலையாகக் கொல்லவொண்ணாது, உயிர்க்கொலையாகக் கொல்லவேணும்: அதில் நீ இவ்வளவுசெய், நான் இவ்வளவுசெய்கிறேன்” என்று க்ருதஸங்கேதராய் வந்தாரைப் போலேயாய்த்திருக்கிறது. [செல்கதிர்இத்யாதி] - செல்லப்பட்டிருந்துள்ள கதிரையுடைத்தான மாலையானது, மயங்கப்பண்ணுகின்றது. அஸ்தமியாநின்றுள்ள ஆதித்யனையுடைய ஸந்த்யையானது, மோஹிப்பியாநின்றது. வாயிலே சீரையைத் துறுத்துக் கொல்லுவாரைப் போலே, ஆற்றாமைக்குப்போக்குவிட்டுக் கூப்பிட்டு யரிக்கவுமொட்டுகிறதில்லை. [சேக்கர் நன்மேகங்கள் சிதைக்குமாலோ] - ஸந்த்யாராகத்தையும் ஶ்யாமமான நிறத்தையு முடைத்தான மேவங்கள் அவனுடைய அவயவஶோபைக்கும் வடிவுக்கும் ஸ்மாரகமாய், “இவை என்னம்புசெய்தது” என்று அவற்றை †கர்ஹித்துக்கொண்டு, “ஆஶ்ரயங்கிடக்கவோ நலிவது?” என்று வயிரத்தைச் செற்றுகின்றது. [அல்லியந்தாமரைக்கண்ணனித்யாதி] - நாம்அவற்றை யின்னாதாகிறதென்? அவன்தான் முன்னே நம்மை முடிக்கக் காரியம்பார்த்து வைத்திலனோ? “கலந்துபிரியவே இவள்முடியும்” என்றன்றோ அவன் பிரிந்தது? இவையானால் போக்குவிட்டடித்தனவிறே; புகலறுத்தான் அவனிறே. [அல்லியித்யாதி]-‡(அல்லியையுடைத்தாய் அழகிய தாமரைபோலேயிருந்த திருக்கண்களையுடையவன்) முதலுறவுபண்ணுவது கண்ணிறே; த்ருஷ்டிபந்தம் பிறந்திறே ஸம்ஶ்லேஷிப்பது. [எம்மான்] - அக்கண்ணழகாலே என்னை அநந்யார்ஹையாக்கினவன். [ஆயர்களேறு] - அவ்வழகாலே இடையரைத் தோற்பித்தாற்போலே. “வுஂஸாஂ” (பும்ஸாம்) - வயிரவுருக்காய்த்து அவனுடையஸௌந்தர்யம். தன்னோடொத்தாரை அப்படி நலியாநின்றால், அபலைகளை நலியச் சொல்லவேண்டாவிறே. [அரியேறு]-கண்ணாலே குளிரநோக்கி இவளை அநந்யபரையாக்கி, இவளோடே ஸம்ஶ்லேஷித்து, அத்தாலே தான் பெறும்பேறு பெற்றானாய் மேனாணிப்புத்தோற்ற நின்றபடி. ஸிம்ஹஶ்ரேஷ்டம். [எம்மாயோன்] - அம்மேன்மையையுடையவன், தாழ்ந்தார்சிலர் உயர்ந்தவர்களோடே கலக்குமா

---

சியும் இத்யாதி. ஏதத்விவரணம் - நற்கொலை இத்யாதி. விவரணம் - அஸ்தமியாநின்றுள்ள இத்யாதி. கதிர் - ஆதித்யன். “மயக்கும்” என்றதுக்கு பாவம் - வாயிலே இத்யாதி. மேவம் பாதகமாகிறது இவ்வாகாரத்தாலே என்னுமத்தைக் காட்டாநின்றுகொண்டு, கீழிலவற்றைப்பற்ற இதின் பாதகத்வாதிஶயத்தை யருளிச்செய்கிறார் - ஸந்த்யாராகத்தையும் இத்யாதி. செற்றநின்றது-செறுக்காநின்றது. சிதைக்கும் - செறுக்காநின்றது. “புல்லியமூலைகளுந் தோளுங்கொண்டு புகலிடமறிகிலம்” என்றத்தைக் கடாக்ஷித்து பாவம்-நாம்இவற்றை இத்யாதி. கார்யம் பார்க்கையாவதே தென்ன - கலந்து இத்யாதி. அவற்றிலும் இவன் செய்தது அதிகமென்கிறார் - இவையானால் இத்யாதி வாக்யத்வயத்தாலே. (இதழையுடைத்தான அழகிய தாமரைபோன்ற கண்ணையுடைய என் ஸ்வாமியென்று ஶப்தார்த்தம். முதல் கண்ணைச் சொன்னதுக்கு பாவம் - முதலுறவு இத்யாதி. அதெப்படியென்ன - த்ருஷ்டிபந்தம் இத்யாதி. கீழோடே கூட்டி “எம்மான்” என்றதுக்கு பாவம் - அக்கண்ணழகாலே இத்யாதி. என்னையேயன்றிக்கே தன்னோடொத்த பருவத்திற் பிள்ளைகளையும் தோற்பிக்குமென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - வுஂஸாஂ இத்யாதி. பும்ஸாமென்றது - “வுஂஸாஂ த்ருஷ்டிசித்தாபஹாரிணஂ” என்கிறபடி யென்றபடி. “ரூப ஸௌந்தர்யஶீலாத்யைர் வயஸா யுக்தம்” என்று இந்த ஶ்லோகத்துக்கு பூர்வார்த்தம். இத்தால் பாவம் - தன்னோடொத்தாரை இத்யாதி “தாமரைக்கண்ணனெம்மான்” என்றத்தைக் கடாக்ஷித்து பாவம் - கண்ணாலே இத்யாதி. “மாயோன்” என்றதுக்கு - வ்யாமோஹமாக அர்த்தம் அருளிச் செய்கிறார்-அம்

---

† கர்ஹித்தல் - பழித்தல். ‡ குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்.

போலே, கையைக்காலைப்பிடித்துத் தாழநின்று பரிமாறினபடி. கலக்கிறபோது மின்மினி பறக்கும்படிகாணும் கலந்தது. [புல்லியமுலைகளும்தோளுங்கொண்டு] - அவனும் வாராதிருக்கிறான்; நானும் வருந்தி ஒருபடி ஜீவித்துக்கிடக்கிறேன்; அவனுக்குப் பிறந்த ப்ரஜைகளைக்கொண்டு புகலிடம்அறிகிலேன். நான்செய்தபடிசெய்ய, இம்முலைகளின் வீக்கம் தீர அநுபவிக்கப்பெறுவது எப்போதோ? க்ஷாமகாலத்தில் ப்ரஜைகள் "சோறு, சோறு" என்னுமாபோலே படுத்தாநின்றன. அவன்தானும் கலக்கிறபோது ஸர்வாங்க ஸம்ஶ்லேஷக்ஷமனன்றுபோலேகாணும். அவனிழிந்த துறையும், இளைப்பாறினவிடமும், [புல்லியவித்யாதி] - கலக்கிறபோதை அவனுடைய அலமாப்பையும், தம்முடைய கரணங்களுக்கு உண்டான ப்ராவண்யாதிஶயத்தையும், அவன் பெறுப்பேறு பெற்றானாய் நின்று பரிமாறினபடியையும், தமக்கொரு புகலற்றிருக்கிறபடியையும் சொல்லுகிறது. [புகலிடமறிகிலம்]- வ்யதிரேகத்தில் தென்றல் முதலான பதார்த்தங்களைத் தப்பிச் சென்று புகுகைக்கு இடங்காண்கிறிலோம். [தமியமாலோ]-இத்தசையில் ரக்ஷகனானவனும் வாராமையாலே தனிமைப்படாநின்றோம். இப்படி தன் விஶ்லேஷதியாக பாதகமானால், பகதத்தன் விட்ட அஸ்த்ரத்துக்கு அர்ஜுநனைத்தள்ளித் தான் மார்வை யேற்றாற்போலே, "இவைவரும்" என்றுஅறிந்தால் தான் கூட விருக்கவேண்டாவோ? அவன்கூடவிருந்தானாகில் இவைதாம் இழிதொழில்செய்யத் தொடங்குமிறே. "ராமஸௌமித்ரிஸஹித:" (ராமஸ்ஸௌமித்ரிஸஹித:) என்று அவர் தாம் நோவுபட்டுக் கூப்பிடுகிறபோது ஒரு தம்பியாராகிலும்கூடவுண்டு நோவுபடுகைக்கு; அங்ஙனும் ஒருதுணையில்லை எனக்கு. "ஸ:" (ஸ:)-பிராட்டியைப் பிரிந்து நடுவே கபந்தன்கையிலே யகப்பட்டு நோவுபட்டு நிற்கிற நிலையைச் சொல்லுகிறது. "தாம்" [தாம்] - இப்பிரிவும் ஆற்றாமையுமில்லாதாரையும் அழிக்கவற்றாய்த்து. "புஷ்கரிணீம்" (புஷ்கரிணீம்) - பரப்புமாறப்பூத்த பொய்கைகளும் சோலைகளுமாய், ஜலக்ரீடைக்கு யோக்யமான தேஶமாய்த்து பிரிந்து தனியிருப்பார்க்குக் கண்கொண்டு காணப் போகாது. "கத்வா" (கத்வா) - நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே. ம்ருத்யுவினுடைய ஆஸ்யத்திற் புகுவாரைப்போலே வந்து கிட்டிக்கொடு நின்றார் ம்ருத்யுவாகிற புடைதான்

---

மேன்மை இத்யாதி ஆஶ்சர்யமாக அர்த்தாந்தரம் . கலக்கிற இத்யாதி; மின்மினி பறந்தாற்போலே க்ஷணந்தோறும் தோற்றும்படி. "புல்லியமுலைகளும்" இத்யாதிக்கு பாவம் - அவனும் இத்யாதி. விவரணம் - நான்செய்த இத்யாதி. புல்லிய - புல்கிய ; ஸம்ஶ்லேஷித்தவென்றபடி. அவனுக்குப் பிறந்த - அவனுக்காக வுண்டான. வீக்கம் - ஆசை ஃபலித - க்ஷாம இத்யாதி. அவயவாந்தரங்களிருக்க, முலையையும் தோளையும் சொல்லுவானென்னென்ன - அவன்தானும் இத்யாதி. அவற்றிலே கலக்கும் ப்ரகாரத்தை விசதீகரிக்கிறார். அவன் இழிந்த இத்யாதி; "மெல்லியல்தோள் தோய்ந்தாய்" என்று இழியுந் துறை தோள் ; "மலராள்தனத்துள்ளான்" என்ற இளைப்பாறினவிடம் முலையென்றபடி. "மாயோன்" என்று தொடங்கி மேலிற்பதங்களுக்கு பாவம் - கலக்கிறபோதை இத்யாதி. "மாயோன்புல்லிய" என்று அவன் அலமாப்பும், "முலைகளுந்தோளும்" என்கிறவிடத்தில் தம்முடைய கரணப்ராவண்யமும், "அரியேறு" என்று பெருப்பேறுபெற்றானாயிருக்கிறபடியும், "புகலிடமறிகிலம்" என்கிறவிடத்தில் புகலற்றபடியையும் சொல்லுகிறது. தமியம் - தமியோமென்றபடி. "ஆலோ" என்றதுக்கு பாவம் - இப்படி இத்யாதி. கூடவிருந்தால் பாதகமாகாதோவென்ன - அவன்கூட இத்யாதி. "தமியம்" என்றதுக்கு பாவம் - ராமஸ்ஸௌமித்ரீ இத்யாதி. ப்ரஸ்துத ஶ்லோகார்த்தம் - ஸ இத்யாதி ; "ஸ தாம் புஷ்கரிணீம் கத்வா பத்மோத்பலஜஷாகுலாம் । ராமஸ்ஸௌமித்ரிஸஹிதோ விலலாபாகுலேந்த்ரிய:" இதி கிஷ்கிந்தாகாண்டே. (கக.) சோலைகளும் என்றது - ஆர்த்தம். "புஷ்கரிணீம்" என்றத்தால் ஃபலிதம் - பிரிந்து இத்யாதி. முகத்துக்

ஏதேன்றல்? "ஃபத்மோத்பலகுலாம்" (பத்மோத்பலஸுஷாகுலாம்) - முகத்துக்கும் கண்ணுக்கும் போலியானவற்றை யுடைத்தாயிருந்தது. "உயர்தாமரைசெங்கழுநீர் மாதர்கள்வாண்முகமும்கண்ணுமேந்தும்" என்னக்கடவதிறே. 'ராமஃ' (ராமஃ) பிறர் கூப்பீடுதவிர்த்துப் போந்தவராய்த்து. "ஸௌமித்ரிஸஹிதஃ" [ஸௌமித்ரிஸஹிதஃ]- "ராக்ஷதர்மேண" (ராக்ஷதர்மேண) என்று ஏதேனுமளவிலும் கூடநின்று நோக்கிக் கொண்டு போந்தவரும் முன்னாக; ஆழ்ழியுமவன் தேப்பம்முன்னாக இழியுமாபோலே. "விலலாபாகுலேந்த்ரியஃ" (விலலாபாகுலேந்த்ரியஃ) - அநேகலக்ஷணங்களோடே யாய்த்துக் கூப்பிட்டது. ப்ராப்யவஸ்துவைப் பேறவேணுமென்னும் மநோரதமாய், கீழ் இவருடைய மநோரதத்துக்கீடாக வந்துகிட்டும்படி அவனும் வாராதேநிற்க, அவனுடைய வரவுக்கீடான தூர்ய கோஷம், ஸ்ரீபாஞ்சஜந்ய த்வநி, ஜ்யாகோஷம், திருவடிதிருச்சிறகோசை, மற்றுமுண்டான நன்னிமித்தங்கள், மநஃப்ரஸாதாதிகள் என்றாற்போலே சொல்லுகிறவை ஒன்றும் காணாமையாலே, அநுகூல பதார்த்தங்கள் பாதகமாகிறது. கரணங்களும் ஶரீரமுமாய் க்லேஶப்படுகையாகிறவிது, விரோதியான ஸம்ஸாரத்தினின்றும் கால் வாங்கவும் மாட்டாதே, இங்குப் பொருந்துவதுஞ் செய்யாதே, கண்டதடையப் பகையாயிருக்கிறபடி. ஆக, "இங்குப் பொருந்தாதே அங்குப் புகப்பெறாதே நடுவேநின்று க்லேஶப்படுகிற அவஸ்த்தை ஸந்த்யையாகிறது" என்றுஇங்ஙனே ஒருதாத்பர்யஞ் சொல்லக் கடவதாயிருக்கும். (க)

---

# இரண்டாம் பாட்டு.

---

புகலிடமறிகிலம்தமியமாலோ! புலம்புறுமணிதென்றலாம்பலாலோ!
பகலநிமாலைவண்சாந்தமாலோ! பஞ்சமம்முல்லைதண்வாடையாலோ! [ன்
அகலிடம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்துஎங்குமளிக்கின்றஆயன்மாயோ
இகலிடத்தசுரர்கள்கூற்றம்வாரான் இனியிருந்தென்னுயிர்காக்குமாறென்?

*ஆ.—(புகலிடம்) - புலம்புறுமணி தென்றல் தொடக்கமாகவுள்ள இவையும் பாதகமாகின்றன; ஸமஸ்தது:கங்களையும் போக்கிக்கொண்டு ஸர்வாத்மாக்களையும் பலபடியால் ரக்ஷிக்கிற பரமகாருணிகனான எம்பெருமான் வருகிறிலன்; இனியிருந்து நான் உஜ்ஜீவிக்கைக்கு உபாயமென்? என்கிறாள்.*

---

தும் கண்ணுக்கும் என்றது - பிராட்டியுடைய கண்ணுக்கும் முகத்துக்குமென்றபடி. அவை போலியோவென்ன - உயர்தாமரை இத்யாதி. 'பிறர்கூப்பீடு' இத்யாதிக்கு - "ரமயதீதிராமஃ" என்று கருத்து. 'ராக்ஷேதி' - "[Sanskrit quotation, illegible in Grantha-Tamil script]" இதி கிஷ்கிந்தாகாண்டே ப்ரதமே (கஉஎ௬). அவரோடேகூடி து:கப்பட்டாரென்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் - ஆழிழியுமவன் இத்யாதி. "ஆகுலேந்த்ரியஃ" என்றதுக்கர்த்தம் - அநேகலக்ஷணங்களோடே என்றது. இத்திருவாய்மொழிக்கு அந்யாபதேஶம் - ப்ராப்யவஸ்துவை இத்யாதி. ஸ்வாபதேஶம் - கரணங்களும் இத்யாதி. "செல்கதிர்மாலை" என்றதுக்கு ஸ்வாபதேஶம் - ஆகஇங்கு இத்யாதி. இங்ஙனே ஒருதாத்பர்யம் சொல்லக்கடவதாயிருக்கும் என்றது - தாத்பர்யாந்தரமன்று; ப்ரவேஶத்திலே யருளிச்செய்த அந்யாபதேஶ ஸ்வாபதேஶங்களை யருளிச் செய்தபடியென்று கருத்து. "ஆல், ஓ" என்ற விரண்டும் அசை; விஷாதாதிஶய ஸூசகம். (க)

ஒ.—இரண்டாம்பாட்டில், பாதகபதார்த்தங்கள் தனித்தனியே நலிந்து அவை பலஹாநி மிகமிகப் பல கூடிவந்து நலியாநின்றன என்கிருள்.

[புலம்பென்று தொடங்கி] - சேக்கள் கழுத்தில் த்வநிக்கிற மணி, தென்றல், குழல் இவையெல்லாம் அவற்றுக்கு ஸ்மாரகமாய்க்கொண்டு நலியாநின்றன. ஆப்வாஸகாமான பகலைப்போக்கின ஸந்த்யையை, அழகிய சந்தனம்,பஞ்சமம்,முல்லையென்கிற யாழ், குளிர்ந்தவாடை இவையெல்லாம் நலியாநின்றன. இப்பதார்த்தங்களுடைய ஆர்ஜநத்தாற்பிறந்த வீதியாலே அவற்றாலேவந்த நலிவு சொல்லமாட்டாதே பதார்த்தத்தைச் சொன்னாள். [அகலிடம் படைத்தென்று மேனுக்கு] - ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணி இருந்ததேகுடியாக ரக்ஷித்து அவ்வளவன்றிக்கே அவற்றின்பக்கலிலே மிகவும் வ்யாமுக்தனாய் ஆஸ்ரித விரோதிகளாய்க்கொண்டு யுத்தபூமியிலே எதிரிட்ட அஸுரர்க்கும் ம்ருத்யுவானவன். அப்படியே இக்காலத்தில் நலிகிறவற்றை நீக்கிக்கொண்டு வந்து தோற்றுகிறிலன்; இப்படி ஆபத்ஸகனானவன் வாராதிருக்க இவற்றின் ஸந்நிதியிலேயிருந்து என் ப்ராணனை நோக்குகையென்று ஒரு பொருளுண்டோ?

ப --அநந்தரம், ஸர்வப்ரகாரரக்ஷகனானவன் ஸந்நிஹிதனாகிறிலன்; பாதகங்கள் தனித்தனியன்றியே திரள்திரளா யீராநின்றன; ஒதுங்கவிடம்காண்கிறிலோம்; இனி ப்ராணரக்ஷணம்பண்ணும் ப்ரகாரமென்? என்கிருள்.

தமியம் - தனிப்பட்டநாம், புகலிடம்-பெருப்படைக்கு ஒதுங்கவிடம், அறிகிலம் - அறிகிறிலோம்; புலம்புஉறு - நாகைத்தொடருகிற சேக்களின் கழுத்திலே த்வநிக்கிற, மணி - மணியும், தென்றல் - (அஸஹ்யமாய் நலிகிற)தென்றலும், ஆம்பலாலோ - இலைக்குழலும், (கூடிக்கொண்டது); பகலடுமாலை - (பதார்த்த ஆர்ஜநம்பண்ணுயல்)பகலை நசிப்பிக்கிற ராத்ரிமுகமும், வண்சாந்தமாலோ - தத்காலோசிதமான அங்கராகஸம்த்தாயமும், (ஒருமுகமாய்த்து); பஞ்சமம் - பஞ்சமமாகிறபண்ணும், முல்லை - முல்லைமாலையும், தண்வாடையாலோ - குளிர்ந்தவாடையும், (ஒருதிரளாய்த்து; இப்படி படைதிரண்டாற்போலே தனித்தனிபாதகங்கள் ஸங்கமான இவ்வவஸ்தையில்), அகலிடம் - விஸ்தீர்ணமானஜகத்தை, படைத்து-உண்டாக்கி, இடந்து - ப்ரளயத்திலழுந்தாமலிடந்தெடுத்து, உண்டு - மஹாப்ரளயத்திலே வயிற்றுக்குள்ளே வைத்துநோக்கி, உமிழ்ந்து - உமிழ்ந்து, அளந்து- (அந்யாபிமாநம்வாராமல்)அளந்துகொண்டு, எங்குமளிக்கின்ற - எல்லாவிஷயத்திலும் வரையாமல்உபகாரகனாய், ஆயன்-இந்தக்காரணத்வ ரக்ஷகத்வத்துக்குஏகாந்தமான க்ருஷ்ணாவதார ஸௌலப்யத்தையுடையனாய், மாயோன் - ரக்ஷணாநுரூபமான ஆஸ்சர்யசேஷ்டிதவிசிஷ்டனாய், இகலிடத்து - யுத்தத்திலே எதிரம்புகோத்த, அசுரர்கள் - அஸுரர்களுக்கு, கூற்றம் - ம்ருத்யுவானவன், வாரான்-(இந்தபாதகஸங்கங்களை அழித்து என்னைரக்ஷிக்கும்படி) வருகிறிலன்,இனி-அவன்விருப்பாமல் உபேக்ஷித்தபின்பு, என்னுயிர்-எனக்கே சுமையான ப்ராணனை, இருந்து-ஸத்தையோடேயிருந்து, காக்குமாறென் - ரக்ஷிக்கும்ப்ரகாரமென்? ரக்ஷ்யவஸ்துதானால் ரக்ஷணத்தில் ஸக்தியும் ப்ராப்தியுமில்லை யென்றுகருத்து. பாதகஸ்வரூபங்களைச்சொல்லி பாதிக்கிறப்ரகாரம் சொல்லாதொழிந்தது, "படைபடை'' என்பாரைப்போலே வாசாமகோசரமான பயமும் ஆர்த்தியும் அதிசயிக்கையாலே. தென்றலையும் வாடையையுஞ்சொல்லிற்று, ஒருக்ஷணத்திலே அநேககல்பகங்கள் கழிகிறதான கருத்தாலே.

இ.—இரண்டாம்பாட்டில், வ யுக பதார்த்தங்கள் தனித்தனியே நலிந்தவை லெல்லாதி மிகப்பல கூடிவந்து நலியாநின்றன என்கிறாள்.

[புகலிடமறிகிலம்]- மேல்வரப்புகுகிற வ்யஸநவர்மத்தை நினைத்துச்சொல்லுகிற வார்த்தையாதல்; கீழ்நலிந்தவற்றுக்கஞ்சி அவ்வச்சம் பின்னாட்டுகிற அநுபாஷணமாதல். [தமியமாலோ] - புகலற்றார்க்குத் துணையாயவன் இவ்வளவில் உதவாமையாலே தனிமைப்படாநின்றோம். [புலம்புறுமணி] - நாகுகளைத் தொடருகிற சேக்களின் கழுத்தின் மணி. அந்நாகுகள் கிட்டாமையாலே கூப்பிடுகிறாற்போலேயாய்த்து த்வநிக்கிறபடி. அது தனக்கு ஸ்மாரகமாய் நலியாநின்றது. [தென்றல்] - "மல்லிகை கமழ்தென்றல்" என்று துணைகொண்டு வருகையன்றிக்கே வெறும்புறத்திலே வந்து நலியாநின்றது. "ஆரைமதித்து உடம்புக்கிட்டு வருவது?" என்று வெறும்புறத்திலே வந்து நலியாநின்றது. [ஆம்பல்] — இலைக்குழலாதல், ஆய்க்குழலாதல். [ஆலோ]- "ஈருமாலோ, தவருமாலோ" என்று நலிகிறபடி சொல்லவொண்ணாதபடி. "புலி" என்பாரைப்போலே இவற்றின் பேர்சொல்ல அஞ்சவேண்டும்படியைச் சொல்லுதல்; இவற்றால்படுகிற நலிவுபேச்சுக்கு நிலமல்லாதபடியாலே சொல்லாதொழிதல். [பகலடுமாலை]-பதார்த்தநிர்பாஸம்பண்ணி தரிக்கலாம் பகலையும் முடித்துக்கொண்டு மாலையானது தோற்றாநின்றது; பிராட்டி தனிமையில் "ஐயோ" என்னும் பெரியவுடையாரை முடித்துக்கொண்டு ராவணன் நலிந்தாற்போலே. [வண்சாந்தம்] - அழகிய சாந்தம். [பஞ்சமம்] - பஞ்சமமாகிற பண். முல்லை-முல்லையாழென்கிற பண்ணுதல்; இடையருக்குத் தார் முல்லையாகையாலே அத்தைச்சொல்லுதல். [தண்வாடையாலோ] - தென்றற்காலமும் வாடைக்காலமும் தன்னிலே தூரமாயிருக்க இப்படி சொல்லுகிறது, பிரிவோடே காலம் நெடுகிச் சென்றபடியென்னுதல்; தென்றலுக்கஞ்சி வாடையின் கீழே ஒதுங்கவந்து நிற்கிறவிடத்திலே வாடை நலிகிறபடியைச் சொல்லுதல்; அநர்த்தஸூசகமாக எல்லாக்காற்றும் ஒருகாலே அடிக்கிறது என்னுதல். [அகலிடம் இத்யாதி] - பரப்பையுடைத்தான பூமி உருமாய்ந்துபோக அத்தையுண்டாக்கி, ப்ரளயாபத்திலே அகப்பட்ட பூமியையிடந்தெடுத்து, ப்ரளயத்தில் அகப்படாமல் வயிற்றிலேவைத்து, நோக்கி, வெளிநாடுகாண உமிழ்ந்து ப்ரபலர்அபஹரித்த வளவிலே எல்லைநடந்து மீட்டுக்கொண்டு இப்படிவரையாதே ரக்ஷிக்கையே ஸ்வபாவமாயிருக்குமவன். இருந்ததே குடியாக ரக்ஷிக்குமவன்கிடீர் மஹிஷிநோவுபட உதவாதிருக்கிறான்! [ஆயன்] - "க்ருஷ்ணவஷ்ரொகா நாழ" என்கிறபடியே ஜகத்காரணபூதன். [மாயன்] - ரக்ஷணார்த்தமான ஆச்சர்ய ஶக்தியுக்தன். [இகலிடத்தசுரர்கள் கூற்றம்] - யுத்தபூமியிலே எதிரிட்ட அஸுரர்க்கு ம்ருத்யுவானவன், எதிரம்புகோத்த அஸுரர்க்காய்த்து ம்ருத்யுவாவது; "ஶரணம்" என்ற அஸுரர்க்கு ரக்ஷகனுமித்தனை; ப்ரஹ்லாத விபீஷணாதிகளை ரக்ஷித்தானிறே. [வாரான்] - என்னைநலிகிற பதார்த்தங்களை ஶிக்ஷித்துக்கொண்டு வருகிறிலன். [இனியித்யாதி] - வரையாதேரக்ஷிக்குமவனுமாய், ப்ராப்தனுமாய் விரோதிநிரஸநஸ்வபாவனுமானவன் வாராதிருக்க ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத எனக்கு ஆறியிருக்கப்போமோ? [இனியிருந்து] - "நசோ௦ஸ௦ஶாவவொஷுவெஜநவஙவி௫ய-வெலவெதெ । வநூ௦ஸ-விஹிதஹிதூ௦ ஷகூ௦ஶாகிவஹுஜெழ" என்கிறபடியே அத்தலையில் ஆற்றாமையும், "வாலிபட்டான், படைகூட்டிற்று" என்றாற்போலே ரக்ஷணத்தில் உத்யோகத்தையும் சிலர்வந்து சொல்லக்கேட்டுத் தான் ஆறியிருக்கி

றேனே? [இனியிருந்து] - "அவனுடைய சரக்கு" என்று ஆத்தனையும் கைநோக்கிக் கொண்டிருந்தேன்; இவற்றின் ஸந்நிதியில், அவன் வாராதொழிந்தபின்பு முடியுமத்தனை போக்கி, இருக்க க்ஷமையல்லேன். [என்னுயிர் காக்குமாறென்] - பிறருயிராகில் காக்கலாமிறே! ஸம்ஶ்லேஷார்த்தமாகப் பரித்துக்கொண்டிருக்குமதொழிய ப்ராணனை நோக்கிக்கொண்டிருக்கப்போமோ?

ஈடு.—இரண்டாம்பாட்டு. முன்பு தூசியேறினபேர்க்கு உரமாகநின்ற பேரணி உறுபூசலானவாறே திரளவமுக்குமாபோலே, தனித்தனியே நலிந்தபாதகங்கள் பலஹாநி மிகமிகப் பலகூடிவந்து நலியாநின்றதென்கிறாள்.

[புகலிடமறிகிலம்] - மேல்வருகிற பாதகபதார்த்தங்களைக்குறித்துச்சொல்லிற்றாகவுமாம்; அன்றிக்கே, கீழ்ச்சொன்னவைதனக்கேயஞ்சி அநுஸந்திக்கிறதாகவுமாம். [தமியமாலோ] - புகலிடமற்றார்க்குத் துணையாமவன் உதவாதொழியத் தனியிருக்கிற விருப்பிறே. (தமியம் - தனிப்பட்ட நாம்.) †[புலம்புறு மணி] - நாகுகளைத்தொடர்கிற சேக்கள்கழுத்தில் மணியினுடையத்வநி, அந்நாகுகள் கைபுகுராமையாலே கூப்பிடுகிறாற்போலே யிராநின்றது. [தென்றல்] - வெறும்புறத்திலே தென்றலென்னவமையும், "மல்லிகைகமழ்தென்றல்" என்னவேண்டா; வினைமுடுகினால் பின்னை யுடம்புக்கீடிடாதே ஏறுவாரைப்போலே. "ஆர்எதிராக உடம்புக்கு ஈடிடுகிறது?" என்றிராநின்றது. [ஆம்பலாலோ] - குழலென்னுதல், இலைக்குழலென்னுதல்; இவையெல்லாம், "ஈருமாலோ, தவருமாலோ, மயக்குமாலோ, சிதைக்குமாலோ" என்றாற்போலே சொல்லவேண்டா; "புலி, புலி" என்பாரைப்போலே இவற்றின்பேரைச்சொல்ல, பயங்கரமாயிருக்கிறது. அன்றிக்கே, இவற்றினுடையநலிவு வாயால்சொல்லில் வாய் வக்குரிக்கும்படியா யிருக்கையாலே, சொல்லாதொழிந்ததாதல். [பகலமோலை] - பிராட்டியுடைய வ்யஸநத்துக்கு உறுப்பாகப் பெரியவுடையாரை முடித்துக்கொண்டுவந்து ராவணன் தோற்றினாற்போலே ஆஶ்வாஸகரமான பகலை முடித்துவந்து தோற்றிற்றாய்த்து ஸந்த்யை. பகல் பதார்த்ததர்ஶநம்பண்ணி யாற்றலாமிறே; அதில்லாமையாலே ராத்ரிவ்யஸநம் ஒருமுகஞ்

இரண்டாம்பாட்டு - புகலிடம் இத்யாதி. கீழ் - தனித்தனியேநலிந்த பாதக பதார்த்தங்கள் திரளாக பாதிக்கும ப்ரகாரத்தை ஸந்தர்ஶநமாக அருளிச்செய்யாநின்றுகொண்டு, அப்படி நலிகைக்கு ஹேதுவையும் அருளிச்செய்கிறார் - முன்பு இத்யாதி. தூசி - ஸேநாமுகம். பேரணி - பெரிய வ்யூஹம். உறுபூசல் - கைகலந்தயுத்தம்; மூலபலயுத்தமாதல். பலஹாநிமிகுகைநலிகைக்கடி - பல கூடிவந்து என்றது - "மணி, தென்றல், ஆம்பல், மாலை, சாந்தம், பஞ்சமம், முல்லை, வாடை என்றவற்றைப்பற்ற.

மேல்வருகிறவென்றது - இப்பாட்டிற் சொல்லுகிறவென்றபடி. தனியேதென்ன - புகலிடம் இத்யாதி. "புலம்புறுமணி" - புலம்புதலிலேயுற்ற மணி; த்வநிக்கிறமணி. த்வநி பாதகமாகிறபடியென்னென்ன - நாகுகளை இத்யாதி. சேக்கள் - வ்ருஷபங்கள். "மல்லிகைகமழ்தென்றல்" என்றாற்போலே விசேஷணமிட வேண்டாவோவென்ன - வெறும்புறத்திலே இத்யாதி. வேண்டாமைக்கு ஹேதுவேதென்ன - வினைமுடுகினால் இத்யாதி. பரிஹாராந்தரம் - ஆர்எதிராக இத்யாதி. ஈடு - ஜோடு, கவசம். "ஆம்பல்"- ஆய்க்குழலும், இலைக்குழலும். "ஈரும், தவரும், மயக்கும்" என்னாதே, வெறுமனே "மணி தென்றலாம்பல்" என்கிறதென்னென்ன, பரிஹாரத்வயம் - இவையெல்லாம் இத்யாதியாலும், அன்றிக்கே இவற்றினுடைய இத்யாதியாலும். வக்குரிக்கும்படி என்றது - வேம்படியென்றபடி. "பகலமோலை" என்றதுக்கு ஸத்ருஷ்டாந்தமாகபாவம் - பிராட்டியுடைய இத்யாதி. பகல் ஆஶ்வாஸகரமோவென்ன - பகல் இத்யாதி. யாழாவது - மாநவிசேஷம்.

செய்திருக்குமிறே. [வண்சாந்தம்] - அழகியசாந்தம், பஞ்சமமாகிற பண். [முல்லை] - யாழ். அன்றிக்கே, முல்லைப்பூத்தான் இடையர்க்குத்தாரா யிருக்குமிறே; அத்தைச்சொல்லிற்றாகவுமாம். [தண்வாடை] - அவ்வாடையோடு தென்றலோடு வாசியற்றுப்போய்த்து. தென்றல்வருவது ஒருகாலமும் வாடைவருவது ஒருகாலமுமாயிருக்குமிறே; அவையெல்லாம் அவ்வவகாலங்களிலேவந்து தோற்றும்படியாய்த்துக் காலம் நெடுகுகிறபடி. அன்றியே, அநர்த்தஸூசகமாய் எல்லாக்காற்றும் ஒருகாலே யடித்ததாகவுமாம். இனித் தென்றலுக்கஞ்சி வாடையின்கீழொதுங்க விரகில்லை. [அகலிடமித்யாதி] - தன்மஹிஷியானவள் இப்படி பாதகபதார்த்தத்தின்கையிலே நோவுபடாநிற்க ஸர்வஸாதாரணமாக ஆபத்துவந்தால் வயிற்றிலேவைத்து நோக்குமவன்கிடீர் இப்போது வாராதொழிகிறான்! பரப்புடைத்தானபூமி உருமாய்ந்துகிடக்க உண்டாக்கி, ப்ரளயங்கொண்ட இத்தையிடந்தெடுத்து, திரியவும் ப்ரளயம்வர வயிற்றிலேவைத்து நோக்கி உள்ளேகிடந்து தளராதபடி வெளிநாடுகாணப் புறப்படவிட்டு, மிடுக்கராயிருப்பார் இறுஞ்சிக்கொள்ள எல்லைநடந்து மீட்டுக்கொண்டு, இப்படி வரையாதேநோக்கும் ஸ்வபாவனானவன்கிடீர் இப்போது வாராதொழிகிறான்! [ஆயன்] - "க்ருஷ்ணவஹ்நி" (க்ருஷ்ணவஹ்நி) இத்யாதி. [மாயோன்]-ஜந்மத்ரக்ஷணத்துக்கு அநுரூபமான ஆஶ்சர்யஶக்தியுக்தன். [இகலித்யாதி]-யுத்தபூமியில்காணும் ஆஸுரவர்க்கத்துக்கு ம்ருத்யுவாயிருப்பது. "மரணம்" என்கிற ப்ரஹ்லாதவிபீஷணாதிகளையழியச்செய்திலனிறே; ராவணஹிரண்யாதிகளையிறே முடித்தது. "த்ராதுர்நமுக்தாயுதிராமவத்யம்" (த்ராதுர்நமுக்தாயுதிராமவத்யம்) என்னக்கடவதிறே. [வாரான்] - இங்கு அம்பேற்கவும்வேண்டா, விரோயிகளுமில்லை, முகங்

---

இடையர்க்குத் தாரானகையாலே க்ருஷ்ணனுக்கு ஸ்மாரகயாய்பாதகமாம் என்றபடி "முல்லை" என்று-முல்லைப்பூவாதல். ப்ராதஃகாலத்திலே வருகிற வாடை ஸந்த்யையிலே வாக்கூடுமோவென்ன - அவ்வாடையோடு இத்யாதி. இவ்வாக்யாந்தரம் - இனித்தென்றல் இத்யாதிவாக்யமநுஸந்தேயம். ' அவ்வாடையோடு " இத்யாதிவாக்ய விவரணம் - தென்றல் வருவது இத்யாதிவாக்யத்வயம். அதாவது - ஒரு ஸந்த்யையிலேதானே விடிவது அஸ்தமிப்பதாய் அநேகம் ப்ராதஃகாலம் நடந்ததென்றிருக்கிறாளென்று கருத்து. பரிஹாராந்தரம் - அன்றியே இத்யாதி. "வாசியற்றுப்போய்த்து" என்றதின் விவரணமாதல், "வாடை" என்னாதே "தண்வாடை" என்றதுக்கு ஹேதுவாதல்-இனித்தென்றலுக்கு இத்யாதி. மேலுக்கெல்லாம் ஹேதும்-தன்மஹிஷி இத்யாதி. "எங்கும்" என்றதைப்பற்ற-வரையாதே என்றது. "அளிக்கின்ற" என்றவர்த்தமாநத்தைப்பற்ற - நோக்கும் ஸ்வபாவன் என்றது. "படைத்திடந்து" இத்யாதிகளெல்லாம் செய்யுமவன் க்ருஷ்ணன் என்னுமதுக்குப்ரமாணம் - க்ருஷ்ணவஹ்நி இத்யாதி "க்ருஷ்ணவஹ்நிர்யோகாநாஶேஷதிரவிர்வாவ்ருத்யஃ க்ருஷ்ணஸ்யஹிக்ருதே பூதமிதம் விஶ்வம்பூராசரம்" இதிமஹாபாரதே. ஸபாபர்வணி (கூஅ). "அசுரர்கள்கூற்றம்" என்னாதே, "இகலிடத்து" என்று விசேஷிப்பானென்? என்ன - யுத்தபூமியில் இத்யாதி. இத்தை உதாஹரணபூர்வகம் தர்ஶிப்பிக்கிறார் - மரணம் இத்யாதிவாக்யத்வயத்தாலே. "இகலிடத்து -" யுத்தபூமியிலே. யுத்தத்திலே கூற்றம் என்னுமதுக்கு ப்ரமாணம் - த்ராதும் இத்யாதி. ' பஹவோ ஹி ஸஹஸ்ரஶஃ ஶூரா ரணே ஶோபிதா ராவணாத் ஸ்வஸ்திநோ ரணே ஜித்வா । உக்த்வா ப்ரஹ்ருஷ்டாஸ்ஸுக்ரீவா ஸ்ரோதா த்ராதும் நமுக்தாயுதி ராமவத்யம் " இதி ஸுந்தரகாண்டே. ராவணம்ப்ரதி மாருதிஃ (நுக-கூரு)"யுதி ராமவத்யம்" என்றதிலே இஶ்ஶ்லோகத்துக்கு நோக்கு. கூற்றம்-ம்ருத்யு. என்பக்கல் வருமிடத்தில் ஒரு ஸௌகர்யமுண்டென்று ப்ரயோஜிக்கிறார்களென்கிறார்-இங்குஅம்பேற்கவும் இத்யாதி. "அகலிடம்படைத்து" என்றுதொடங்கி "வாரான்" என்றவற்றையுங்கூட்டி, "இனி"

காட்டவமையும். [இனியித்யாதி] - வரைந்துநோக்குவானொருவனுய் நான்ஆறியிருக்கிறேனோ? வருமிடத்தில் ப்ரதிபந்தக முண்டென்று ஆறியிருக்கிறேனோ? என்னுடையரக்ஷணத்தில் எனக்குஅந்வயமுண்டாய்த்தான் ஆறியிருக்கிறேனோ? வரையாதே ரக்ஷிக்குமவனுமாய் ஶக்தனுமாய் ப்ராப்தனுமாயிருக்கிறவன் வாராதொழிய, அவனுடைய ரக்ஷ்யகோடியிலேயாய் அஶக்தையாய் அப்ராப்தையாயிருக்கிற நான் என்ப்ராணனைக்கா நோக்குகையென்று ஒருபொருளுண்டோ? [இனியிருந்து] - வருந்தனையும் ஜீவித்துக்கிடக்கும்படி "நமாம்ஸம்ராகவோபுங்க்தே" (நமாம்ஸம்ராகவோபுங்க்தே) என்று சிலர் சொல்லுதல், "த்வாமபஶ்யந்ருபாத்மஜே" (த்வாமபஶ்யந்ருபாத்மஜே) என்னுதல் செய்துதான்ஆறியிருக்கிறேனோ? வரவுக்குஉடலாக 'கரன்பட்டான், கபந்தன்பட்டான், வாலிபட்டான், கடலடைப்பது, வந்துபுகுந்தாரத்தனை' என்றுதான் ஆறியிருக்கிறேனோ? [இனியிருந்து] - இதுக்கு முன்பெல்லாம் "அவன்சரக்கழியவொண்ணுது" என்று நோக்கிக்கிடந்தமை தோற்றுகிறதாய்த்து 'இனி' என்கையாலே. [என்னுயிர்காக்குமாறென்] - பிறருயிராய்த்தான் நோக்கியிருக்கிறேனோ? இவற்றின்கையிலே நோவுபட எனக்குப்பணியாகவோ என்னுடைய ப்ராணரக்ஷணம்? (௨)

---

## மூன்றும் பாட்டு.

---

இனியிருந்தென்னுயிர்காக்குமாறென் இணைமுலைநமுக நுண்ணிடை நுடங்கத், துனியிருங்கலவிசெய் தாகந்தோய்ந்து துறந்தெம்மையிட்டகல் கண்ணன் கள்வன், தனியிளஞ்சிங்கமெம்மாயன்வாரான் தாமரைக்கண்ணுஞ்செவ்வாயும் நீலப்,பனியிருங்குழல்களுநான்குதோளும்பாவியேன் மனத்தேநின்றீருமாலோ!

---

*என்றதுக்கு வ்யதிரேகாந்வயமுகங்களாலே ஸாவமருளிச்செய்கிறார்-வரைந்து இத்யாதி நாலுவாக்யத்தாலே. "படைத்து" என்றத்தால் ஸித்தமான ஜநகத்வத்தைவிவக்ஷித்து, ப்ராப்தனுமாய் என்றது. "உயிர்" என்கையாலே - ஸ்வரக்ஷணேஸ்வாந்வய மில்லாமை ஸித்தம். "காக்குமாறென்" என்றத்தைப்பற்ற - நோக்குகையென்றொரு பொருளுண்டோ என்றது. "வாரான்" என்றதிலே ஸஹகாரி ராஹித்யத்தையும் விவக்ஷித்து, அத்தோடேகூட்டி, "இனி" என்றதுக்கு இரண்டாம்ஸாவம் - வருந்தனையும் இத்யாதி. விவரணம் - வரவுக்கு இத்யாதி. 'நமாம்ஸம்ராகவோபுங்க்தே நசாபி மதுஸேவதே । வந்யம் ஸுவிஹிதம் நித்யம் பக்தமஶ்நாதி பஞ்சமம் ॥ நைவ தம்ஶாந் நமஶகாந் ந கீடாந் ந ஸரீஸ்ருபாந் । ராகவோऽபநயேத் காத்ராத் த்வத்கதேநாந்தராத்மநா ॥' இதி ஸுந்தரகாண்டே ஸீதாம்ப்ரதி மாருதிः இதுக்குமூன்றும்ஸாவம் - இதுக்குமுன்பு இத்யாதி. அதவா, 'வரவுக்குஉடலாக' இத்யாதிவாக்யம் மூன்றாம்ஸாவமாய், 'இதுக்குமுன்பெல்லாம்' இத்யாதி. வாக்யம் நாலாம்ஸாவமாதல். "என்" என்றதுக்குஸாவம் - பிறருயிர் இத்யாதி. பிறர் என்றது ஈஶ்வரனை. அதாவது - அவனுக்கு உறப்பானுல் நோக்கலாமொழிய அவன்விட்டால் நோக்கப்போமோ வென்றபடி. "யாஶ்ச த்வாமபஶ்யந்ருபாத்மஜே" இதிவத். ஃபலிதம் - இவற்றின் இத்யாதி "புகலிடமறிகிலம்தமியமாலோ" என்றது - அநுவாதமானபோது, 'புலம்புறமணிதென்றல்' என்று தொடங்கி, 'காக்குமாறென்' என்றளவேயந்வயம்; அநுவாதமாகாதபோது, 'புலம்புறு' என்று தொடங்கி, 'காக்குமாறென்'; ஆகையாலே, 'தமியம் - புகலிடமறிகிலம்' இத்யந்வயः. (௨)*

ஆ—(இனியிருந்து.) - தன்னுடைய ஆஶ்சர்யமான ஸௌர்யாதிகுணங்களாலே என்னை வஶீகரித்து, தன்னை ஒருக்ஷணம் விஶ்லேஷிக்கில் கிரவயிகதுஃகத்தை விளைக்கும் அதிமாத்ரஸம்ஶ்லேஷத்தைப்பண்ணி, ஒரு த்ருணத்தைப் பரித்யஜித்தாற் போலே என்னைப்பரித்யஜித்தகன்றகண்ணன் வருகிறிலன்; அவனுடைய தாமரைக் கண்ணும், செவ்வாயும், நீலப்பனியிருங்குழல்களும், நான்குதோளும் என்னெஞ்சை ஈராநின்றன; இனியிருந்து என்னுயிர்காக்கைக்கு உபாயமென்? என்றலற்றுகிறாள்.

ஒ—மூன்றாம்பாட்டில், அவனுடைய திவ்யாவயவங்கள் ஹ்ருதயத்திலே ஸ்ம்ருதமாய்நின்று நலியாநின்றன என்கிறாள்.

[இனியிருந்தென்னுயிர் காக்குமாறென்] - அவனுடைய ஸௌந்தர்யமே உள்ளே நின்று நலியாநின்றால், இனி ப்ராணனைக் காக்கவிரகுண்டோ? என்கிறாள். [இணைமுலையென்று தொடங்கி] - ஸம்ஶ்லேஷ ஸௌஹார்த்தத்தாலே முலைகளிரண்டும் குழைபவும் நுண்ணியவிடை நுடங்கும்படியாகவும் துஃவஹலகமான ஸம்ஶ்லேஷத்தைப் பண்ணி என்னை நீராக்கி என்னுடம்பிலே தோய்ந்து; பொறுக்கவொண்ணாதபடி நிரதிஶய ஸுவமாம்படி கலந்தென்றுமாம். [துறந்தெம்மையிட்டகல் கண்ணன்] - அசேதநங்களைப் போகடுமாபோலே எங்களைப்போகட்டு அகலுகையே ஸ்வபாவமான க்ருஷ்ணன். [கள்வன்தனியென்று தொடங்கி] - ஸம்ஶ்லேஷ உஹையில் ஸர்வஸ்வாபஹாரிதமான ஆலோகஅவலோகனாதிகளை யுடையனாய், என்னோட்டைக் கலவியாலே இளகிப் பதித்து மேனாணிப்பதுஞ் செய்து, விஶ்லேஷ உஹையில் என்பக்கலிலே அதிசாபலத்தையுடையவன் வருகிறிலன்; தாமரைப்பூப்போலே யிருக்கிற கண்ணும் சிவந்த திருப்பவளமும், கறுத்துக் குளிர்ந்திருந்துள்ள பெரிய திருக்குழல்களும் நாலு திருத்தோள்களும் இவ்வழகுகளை அநுபவித்து இழந்தால் மதிகெடாதே நினைத்து நோவுபடுகைக்கீடான பாபத்தைப்பண்ணின என்னுடைய மநஸ்ஸிலே நிரந்தரமாகநின்று நலியாநின்றன.

ப.—அநந்தரம், பாஹ்யமான பாஹுகங்களேயன்றியே, அதிரமணீயமான அவனுடைய அவயவங்களானவை ஆந்தரமாக நலியாநின்றன; இனி ப்ராணரக்ஷணம் பண்ணும் ப்ரகாரமென்? என்கிறாள்.

இனி - ஆஶ்வாஸகரங்கள் பாஹுகங்களானபின்பு, இருந்து-, என்னுயிர் - என் ப்ராணனை, காக்குமாறு என் - ரக்ஷிக்கும் ப்ரகாரமென்? இணைமுலை - சேர்த்தியழகாலே அவனுக்கு ஊர்ஶநீயமான முலைகளானவை, நமுக - (ஸம்ஶ்லேஷஸாரஸ்யத்தாலே) குழையும்படியாகவும், நுண்ணிடை - நுண்ணிடையானது, நுடங்க - தளரும்படியாகவும், துனி - துஃவோஊர்க்கமாம்படி, இரு - (ஆஶ்ரயத்தளவன்றிக்கே) பஹுமுவமான, கலவிசெய்து - ஸங்கத்தைப்பண்ணி, ஆகம்தோய்ந்து - (விடாயர் மடுவிலே முழுகுமாபோலே பெரிய அபிநிவேஶத்தோடே) என்வடிவிலே அவகாஹித்து ஸுஜித்து, (அநந்தரத்திலே), எம்மைத்துறந்து-(பின் இரக்கமறும்படி) என்னைக்கைவிட்டு, இட்டு - (அசேதந ஸமாநமாம்படி) பொகட்டு, அகல்கண்ணன் - அகலுகையே நிரூபகமான க்ருஷ்ணனாய், கள்வன் - விஶ்லேஷார்ஹமான ஸம்ஶ்லேஷஊஹையில் க்ருத்ரிமமான வ்யாபாரத்தை யுடையனாய், தனி - பெறுப்பேறு பெற்றானும்படி அத்விதீயனாய், இளம்சிங்கம்-(அத்தாலே) பாலஸிம்ஹம்போலே வடிவில்இளமையையும் மேனாணிப்பையு முடை

யனுய், எம்மாயன் - விப்ரலேஷாபிப்ராயத்தாலே தாழ்ந்துபரிமாறின ஆச்சர்யசேஷ்டிதங்களை யுடையவன், (தான்), வாரான் - வருகிறிலன்; தாமரைக்கண்ணும்-பிரிகிறவளவில் செல்லாமை தோன்ற நோக்கின தாமரைபோன்றகண்ணும், செவ்வாயும் - (விப்ரலேஷோக்தியை வ்யக்தீகரிக்கமாட்டாத) சிவந்த திருப்பவளமும், நீலம் - (ஸம்ச்லேஷதசையில் ப்ரலயமாய் அநியமிதமாகையாலே மிகைத்த) நீலநிறத்தையும், பனி-குளிர்த்தியையும், இரு - பரப்பையுமுடைத்தான, குழல்களும் - திருக்குழல்களும், நான்கு தோளும் - (விப்ரலேஷதசையில் தரிக்கைக்காக பரிஷ்வங்கார்த்தமாகப் பணைத்த) நாலு திருத்தோள்களும், பாவியேன் - (பிரிந்திருந்து ஈடுபடுகைக்கீடான) பாபத்தையுடைய என், மனத்தே - மநஸ்ஸிலே, நின்று - ப்ரகாசித்துநின்று, ஈரும் - நலியாநின்றன. நமுகுதல் - குழைதல்.

இ.—மூன்றாம்பாட்டில், கண்ணுற்கண்டவை வ்யூகமாகப் புக்கவாறே, அவற்றுக்கஞ்சிக் கண்ணைச் செம்பளித்தாள்; அகவாயிலே அவன்அழகுகள் ஸ்மாரகமாய் நின்று நலியாநின்றன என்கிறுள்.

[இனியிருந்தென்னுயிர்காக்குமாறென்] - எனக்கு தாரகமான அழகு பகையானல் எனக்கு ப்ராணனை நோக்கவிரகுண்டோ? [இணைமூலை] - அவன்சேர்த்தியழகு கொண்டாடும் முலை. [நமுக] - குழைய. கடின ஸ்தலம் வர்ஷத்தாலே நெகிழுமாபோலே ஸம்ச்லேஷதசையில் ஸ்பர்சத்தாலே குழைந்தபடி. [நுண்ணிடைநுடங்க] - வெறும்புறத்திலே அருங்குலைக்கீழ் விளைநிலம்போலே நோக்கவரிதான இடை நுடங்கும்படியாகவும்: கலக்கும்போது எதிர்த்தலையைப் பேண அறிந்திலன்; தன்அபிநிவேசம் தீர்ந்தானத்தனை. [துனியிருங்கலவிசெய்து] - துக்கமூலமான கலவிசெய்து. [இருங்கலவி] - கலக்கிறபோது பரிமாறினவகைகள், ஆச்சரியத்தளவன்றிக்கே யிருக்கை. ஸம்ச்லேஷம் விப்ரலேஷாந்தமாயல்லதிராமையாலே துக்கத்தை விளைக்குமென்னுதல்; அத்தசையில் பொறுக்கப் போகாதபடியிருக்கையாலே துக்கரூபமென்னுதல். [ஆகம் தோய்ந்து] - என்னை நீராக்கி என்னுடம்பிலே தோய்ந்து. "ஸ்ரீ ஷேமஸ்தவிஹூ" என்னுமாபோலே, தன்விடாய் கெட்டானையிருந்தான். என்னுடம்போடே அணைந்தது தனக்குப் பேறுப்போதாக நினைத்திராநின்றான். [துறந்தெம்மையிட்டு] - இப்படி விருப்பத்துக்கு விஷயபூதையான என்னைக்கைவிட்டு அநேகதந்தைப் பொகட்டாற்போலே பொகட்டோம் என்னும் நினைவுமில்லாதபடி பொகட்டு இப்படி அவஹாஹித்ததெல்லாம் கைவிடுகைக்கு உடலாய்த்தென்கை. [அகல்கண்ணன்] - அகலுகையே ஸ்வபாவமான க்ருஷ்ணன். அவனுக்குக்கலவி காதாசித்கம்; அகலுகையே நிரூபகம்; கலவியாலல்லது பிரிவுண்டாகாமையாலே கலந்தானித்தனை. [கள்வன்தனியிளஞ்சிங்கம்] - கலக்கிறபோதை நோக்கும், பேச்சும், பண்ணின வ்யாபாரங்களும் ஸாவஸ்வாபஹாரிகளாயிருக்கை; அப்போது தன்ஆற்றாமையாலே கலக்கிறானென்று தோற்றும்படியாய் மெலத்தில் பிரிந்து நோவுபடுத்தச் செய்தானாயிருக்கை யென்றுமாம். [தனி] - என்னோட்டைக்கலவியாலே அத்விதீயனென்று தோறும்படியிருக்கிறவன். [இளஞ்சிங்] - என்னோட்டைக்கலவியாலே இளகிப்பதித்து மேனாணித்திருக்கிறவன். [எம்மாயன் வாரான்] - பிரிவை நினைத்துக் கலங்கிப் போகமாட்டாதே எம்பக்கல் அதிசாபலத்தாலே அத்தசையில் தடுமாறினவன் இப்போது வருகிறிலன். அத்தசையில் சாபலத்தோபாதி போரும் இப்போதை விரக்தியும். [தாமரை இத்யாதி] - அவன் கண்

னுக்கு விஷயமாகாதொழிந்தால் இவை நெஞ்சுக்கு விஷயமாகாதொழிந்தால் ஆகாதோ? தான் போகாநின்றால் இவற்றையும் வைத்துப் போகவேணுமோ? கலந்தபோது தன்பேறென்று தோற்றும்படியான ஹர்ஷமடங்கக் கண்ணிலே தோற்றும்படியான திருக்கண்களையுடையவன் என்னுதல்; பிரிவைநினைத்து வாய்விடமாட்டாதே ஆற்றாமையடங்கலும் நோக்கிலே தோற்ற நின்ற நிலையென்னுதல். [செவ்வாயும்]-பிரிவை ப்ரஸங்கித்து முடியச்சொல்லமாட்டாத போதைச் சிவந்த அதரமும். [நீலப்பனியிருங் குழல்களும்]-கலவியாலே குலைந்து பிரிவைநினைத்துப் பேணமாட்டாதபோதைக் கறுத்துக்குளிர்ந்த பெரியதிருக்குழல்களும். [நான்குதோளும்] - †இவள் தடுமாற்றத்தைக்கண்டு குழலைப் பேணி வருந்தவேயும் தரிப்பரிதாகத்தான் எதிரே அணைத்த நாலுதோளும். "உபஸம்ஹார" என்றது கம்ஸாதிகளுக்கிறே; பெண்களுக்கு நாலாய்த் தோற்றுமிறே. [பாவியேன்] - இவ்வழகுகளை யநுபவிக்க இழந்தால், அறிவழிந்திருக்கப்பெறாதே நினைக்கைக்கு அடியான பாபத்தைப் பண்ணின என்னுடைய. [மனத்தே நின்று ஈருமாலோ]-மநஸ்ஸிலே நிரந்தரமாகநின்று நலியாநின்றது. அணைக்க எட்டுதல், நெஞ்சுக்கு எட்டாதொழிதல்செய்யப் பெற்றிலேன். அறிவழிந்து மறந்துபிழைக்கவும் பெற்றிலேன்.

ஈடு.—மூன்றும் பாட்டு. கண்ணுக்கிலக்கான பதார்த்தங்களடங்க வ்யாபகமாகப்புக்கவாறே அவற்றுக்கஞ்சாக் கண்ணைச் செம்பளித்தாள்; அகவாயிலே அவன் அழகு ஸ்ம்ருதமாய் நலியாநின்றதென்கிறாள்.

[இனியிருந்தென்னுயிர்காக்குமாறென்] - என்னதென்றபிமாநித்த உடம்பு பகையாய்த்து: என்னதென்றபிமாநித்த அழகு பகையாய்த்து; இனியிருந்து என்னுடைய ப்ராணரக்ஷணம்பண்ண என்றொரு பொருளுண்டோ? [இணைமுலைநமுக] - அவன் சேர்த்தியழகுசொல்லி வாய்வெருவும் முலைகளானவை, கடிநஸ்தலத்திலே வர்ஷித்தால் பதமாமாபோலே, ஸம்ஶ்லேஷஸமயத்தில் அவனுடைய ஸ்பர்ஶத்தால் மெல்கிக்குழைந்தபடி. நமுகை-குழைகை. [நுண்ணிடைநுடங்க]-வெறும்புறத்திலும் அருங்கலைக்கீழ் விளைநிலம்போலேநோக்கவரிதான இடை நுடங்கும்படியாகவும். கலக்கும்போது எதிர்த்தலையைப் பேண அறிந்திலன்: தன்அபிநிவேஶம் தீர்ந்தானத்தனை. [துனியிருங்

மூன்றும்பாட்டு - இனி இத்யாதி. கீழ் - வ்யாபகபதார்த்தங்கள் வ்யாபிக்கிறபடியைச் சொல்லி வந்தவள், இப்பாட்டிலே - அழகு வ்யாபகமானபடியைச் சொல்லுகிறதென்னென்ன - கண்ணுக்கிலக்கான இத்யாதி. "மனத்தேநின்றீருமாலோ" என்கையாலே - கண்ணைச் செம்பளித்தமை ஸித்தம்.

"இணைமுலைநமுக" என்றுதொடங்கி "ஈருமாலோ - இனியிருந்தென்னுயிர்காக்குமாறென்" என்று அந்வயமுகேந ஹாவம் - என்னதென்று இத்யாதிவாக்யத்ரயம். வாக்யத்வயாதியிலும், என்னதென்றபிமாநித்த என்றது - அர்த்தாத் ஸித்தம். "இணைமுலைநமுக" இத்யாதியைப் பற்ற - உடம்பு என்றது. உடம்பாவது - தன்னுடைய ஶரீரம். "தாமரைக்கண்ணும்" இத்யாதியைப்பற்ற - அழகு என்றது. "துனியிருங்கலவிசெய்து" என்றுதொடங்கி, "வாரான்" என்னுமளவும்சொல்லுகையாலே, 'உடம்பு பகையாய்த்து' என்றது ஸித்தம். ஆத்மஶ்லாகை வாராமைக்காக அருளிச்செய்கிறார் - அவன்சேர்த்தியழகு இத்யாதி. மெல்கி - ம்ருதுவாய். அருங்கலை - நோக்க வரிய கரை. கீழ்வாக்யத்தால் ஸித்தமாதல், கீழிற்பதத்தையும் மேலிற்பதத்தையும் கடாக்ஷித்து ஹாவமாதல் - கலக்கும்போது இத்யாதிவாக்யத்வயம். நுடங்க - தளரும்படியாக. "துனி"

† 'இவன் தடுமாற்றத்தைக்கண்டு குழலைப்பேணி வருந்தவேயுந் தரிப்பரிதாக நான' என்று பாடங்காண்கிறது.

கலவிசெய்து] - து:ஃவஃலமான கலவியைச்செய்து. [இருங்கலவி]-கலக்கிறபோது பரிமாறின வகைகள், ஆஸ்ரயத்தளவன்றிக்கே யிருக்கை. ஸம்ஸ்லேஷம் விஸ்லேஷாந்தமாயல்ல திரானமயாலே து:ஃவத்தை விளைக்குமென்னுதல்; அத்தனையிலே தலைதடுமாறுகக் கலக்கையாலே பொறுக்கவொண்ணுதபடி து:ஃவரூபமென்னுதல். [ஆகந்தோய்ந்து] - இக்கலவியாலே நீராக்கி, "[Grantha]" (ஏஷப்ரஹ்மப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மேஶீதமிவஹ்ரதம்) என்கிறபடியே இவளோடே கலந்தானாய்த்து; க்ரீஷ்மகாலத்தில் மடுவிலே முழுகிக்கிடப்பாரைப்போலே. [துறந்து] - இப்படி யவகாஹித்ததெல்லாம் போகடுகைக்கு உடலாய்த்து. [எம்மையிட்டு] - இப்படி என்பக்கலிலே விருப்பத்தைப்பண்ணிவைத்து, சில அசித்பதார்த்தங்களைப் போகடுமாபோலே போகட்டோமென்கிற நினைவும் கூடப் போகட்டானாய்த்து. [அகல்கண்ணன்] - இவனுக்குக்கலவி காதாசித்கம் ; அகலுகை நிரூபகம்: கலவியாலல்லது பிரிவு கூடாமை கலந்தானத்தனை. [கள்வன்] - ஸம்ஸ்லேஷத்தில் தளிரநோக்கும் நோக்கும், பேசினபேச்சும், பரிமாறின பரிமாற்றமு மெல்லாம் ஸர்வஸ்வாபஹார கூஷமமாயிருக்கிறது. கலக்கிறபோது செய்தவையடையத் தன்னுற்றாமையாலே செய்தானென்று தோற்றும்படியாய்ப் பிரிவில் இவை நம்மைவாயிக்கைக்காகச் செய்தானாயிராநின்றது. [தனியித்யாதி] - "[Grantha]" (யஸ்யஸா ஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹித்தேஜ:) என்னுமாபோலே, இவளோட்டைக் கலவியாலே அத்விதீயனென்று தோற்றும்படியிருந்தான். [இள] - கலக்கக் கலக்கக் கீழ்நோக்கிப் பிராயம் புகாநின்றான். [சிங்கம்] - இவளோட்டைக் கலவியாலே பெறுப்பேறு பெற்

---

என்று - து:ஃவமாய், தத்ஃலத்தைச் சொல்லுகிறது ; து:ஃவஃலமானவென்றபடி. து:ஃவஃலகமாய் ஆஸ்ரயத்தளவல்லாத வைஹாமுகமான ஸம்ஸ்லேஷத்தைப்பண்ணியென்று மூந்தினவர்த்தம். * இருமை - பெருமையாய், ஆதிக்யத்தைச்சொல்லுகிறது. "து:ஃவஃலம்" என்றத்தை விவரியாநின்றுகொண்டு, "தனியிரு" என்றதுக்கர்த்தாந்தரம் - ஸம்ஸ்லேஷம் இத்யாதிவாக்யத்வயம். இருமை - பெருமையாய், அஸ்ஸஹமென்றபடியாய், அஸ்ஸஹமாய் து:ஃகரூபமான கலவியைப் பண்ணியென்றிரண்டாமர்த்தம். தோயும்போது நீரிலேயாகவேண்டுகையாலே- நீராக்கி என்றது. "ஆகம்தோய்ந்து -" வடிவிலே யவகாஹித்து. "ஆகந்தோய்ந்து - தனியிருங்கலவி செய்து" என்றநவயிப்ப து.நீரான துக்கு ப்ரமாணம்-ஏஷப்ரஹ்ம இத்யாதி. "[Grantha] [Grantha]", இதிஸ்ரீராமாயணே [ஶோகூ,4,50] "[Grantha]" என்றதுக்கர்த்தம் - க்ரீஷ்மகாலத்தில்இத்யாதி. கிழையும்கூட்டி "துறந்து" என்றதுக்கு ஸாவம்-இப்படியவகாஹித்து இத்யாதி. "இட்டு" என்று அசேதநவத் சொன்னதுக்கு ஸாவம் - இப்படி யென்பக்கலிலே இத்யாதி. துறந்து-பொகட்டு ; இட்டு-துறந்தோமென்கிற நினைவையும் பொகட்டு என்றிரண்டுக்கும்ஹேதம். "என்னைக் கைவிட்டு அசேதநஸமாநமாம்படி பொகட்டு" என்று உரையில் ஸப்தார்த்தம். "கலவி செய்து" என்று வைத்து, "அகல்கண்ணன்" என்று நிரூபித்ததுக்கு ஸாவம் - இவனுக்கு இத்யாதி. ஆனல் கலப்பானென்? என்ன-கலவியால் இத்யாதி. "கள்வன்" என்றதுக்கு ஸர்வஸ்வாபஹாரகனென்றர்த்தம் அருளிச்செய்கிறார் - ஸம்ஸ்லேஷத்தில் இத்யாதி. "கள்வன்" என்றதுக்கு வஞ்சகனென்றர்த்தாந்தரம் - கலக்கிற இத்யாதி. "தனி" என்றதுக்கர்த்தம் - யஸ்யஸா இத்யாதி. "[Grantha]" இத்யாதி ஆரண்யகண்டே ராவணம்ப்ரதி மாரீச:(௩௭-௧௮) மாயன்-சபலன். சாபல்யமேதென்ன-பிரிவை இத்யாதி. இவ்வாக்

ருனுய் மேனுணித்திருந்தபடி. [எம்மாயன்வாரான்] - பிரிவைநினைத்துக் கலங்கிப் போகமாட்டாதே என்பக்கல் அதிசாபலத்தாலே அத்தசையில் தமோறினவன் இப்போது வருகிறிலன். அத்தசையில் சாபலத்தோபாதியும் போரும் இப்போதை விரக்தியும். அப்போது போகையிலுள்ள அருமை போரும், இப்போது வருகையிலுள்ள அருமையும். [தாமரையித்யாதி] - அவன், கண்ணுக்கு விஷயமாகா தொழிந்தால், இவை நெஞ்சுக்கு விஷயமாகாதொழிந்தா லாகாதோ? தான் போகிருன், இவற்றைவைத்துப் போக வேணுமோ? கலந்தபோது தன்பேறென்று தோற்றும்படியான திருக்கண்களை யுடையவனென்னுதல்; பிரிவைநினைத்து வாய்விடமாட்டாதே ஆற்றுமையடங்கலும் நோக்கிலே தோற்றும்படி நின்ற நிலை யென்னுதல். [செவ்வாயும்] - பிரிவை ப்ரஸங்கித்து முடியச் சொல்லமாட்டாதபோதைச் சிவந்த திருவதரமும் இவனுடைய * நிமியும்வாயும், கண்களும் இருக்கிறபடி. [நீலப்பனியிருங்குழல்களும்] - கலவியாலே குலைந்து பிரிவை நினைத்துப் பேணமாட்டாதபோதைக் கறுத்துக் குளிர்ந்த பெரிய திருக்குழலும் [நான்கு தோளும்] - இவள்தமோற்றத்தைக் கண்டு குழலைப்பேணிவருந்தனையும் தரிக்கைக்காக நெருக்கியணைத்த நாலுதிருத்தோளும்; "உபஸம்ஹர" (உபஸம்ஹர) என்றது கம்ஸாதிகளுக்கிறே; பெண்களுக்கு நாலாய்த்தோற்றுமிறே. "ஶங்கசக்ரகதாபாணே" (ஶங்கசக்ரகதாபாணே) என்றுளிறே. [பாவியேன்] - இவ்வழகுகளை யநுபவித்து இழந்தால், மறந்திருக்கப் பெறுதபடியான பாபத்தைப்பண்ணின என்னுடைய. [மனத்தே நின்றீருமாலோ] - மநஸ்ஸிலே நிரந்தரமாக நின்று நலியாநின்றது. அணைக்கும்படி கைக்கேட்டுதல், நெஞ்சுக்கேட்டாதொழிதல் செய்யப் பெற்றிலேன். † அறிவிழந்து மறந்து பிழைக்கவொண்ணுதபடி பண்ணிஞுய்த்து. (ரு)

---

யத்தால் ஃபலிதம் - அத்தசையில் இத்யாதி. ஏதத்விவரணம்-அப்போது இத்யாதி. "வாரான்" என்றத்தைக் கடாக்ஷித்து மேலுக்கெல்லாம் பாவம் - அவன், கண்ணுக்கு இத்யாதி. விவரணம் - தான் போகிறன் இத்யாதி. "தாமரைக்கண்ணும்" என்றதுக்கு, "கலவிசெய்து, துறந்து" என்கிற பதங்களைக் கடாக்ஷித்து பாவத்வயம் - கலந்தபோது இத்யாதி வாக்யத்வயம். "துறந்து" என்றதுக்கநுகுணமாக "செவ்வாயும்" என்றதுக்கர்த்தம் - பிரிவை ப்ரஸங்கித்து இத்யாதி. "தாமரைக் கண்ணும்" என்றதி னிரண்டாமர்த்தத்துக் கநுகுணமாக இவள்படி அவனுக்கும் உண்டென்கிருர். இவனுடைய இத்யாதி. நிமியும் வாயும் - உதடுநெளிக்கிற வாயும். இருமை - நீட்சியாய், முடித்திருக்கிற குழலில் நீட்சி தோற்றுகைக்கு ஹேதுவேதென்ன - கலவியாலே இத்யாதி. போகாநிற்கிறவன் தோளை இவள் எப்படியறிந்தாளென்ன - இவள் தமோற்றத்தை இத்யாதி. க்ருஷ்ணனுக்கு நாலுதோளுண்டோவென்ன-உபஸம்ஹர இத்யாதி. "உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதத் சதுர்புஜம் । ஜாநாது மாவதாரம் தே கம்ஸோயம் திதிஜந்மஜ:" இதி பஞ்சமேம்ஶே தேவகீ (ரு-யரு). அப்படி தோற்றிற்றோவென்ன ப்ரமாணம் - ஶங்கசக்ர இத்யாதி. "ஶங்கசக்ரகதாபாணே த்வாரகாநிலயாச்யுத । கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் ஶரணாகதாம்" இதி ஸபாபர்வணி பாஞ்சாலீ (எகி-சுரு). பாபமேதென்ன - இவ்வழகுகளை இத்யாதி. "மனத்தே" என்றஅவதாரணார்த்தம் - அணைக்கும்படி இத்யாதி. "ஆலோ" என்றதுக்கு பாவமாதல், "ஈரும்" என்றவர்த்தமானத்துக்கு பாவமாதல் - அறிவிழந்து இத்யாதி. 'இணை மூலைநமுக' என்று தொடங்கி, 'நின்றீரும் - இனியிருந்தென்னுயிர்காக்குமாறென்' இத்யன்வய: (ரு)

---

† அறிவழிந்து என்று பாடாந்தரம்.

# நான்காம் பாட்டு.

---

பாவியேன்மனத்தேநின்றீருமாலோவாடைதண்வாடைவெவ் வாடையாலோ! மேவுதண்மதியம்வெம்மதியமாலோமென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாலோ! தூவியம்புள்ளுடைத்தெய்வவண்டுதுதைந்த எம் பெண்மையம்பூவிதாலோ! ஆவியின்பரமல்லவகைகளாலோயாமுடை நெஞ்சமும்துணையன்றுலோ!

ஆ.—(பாவியேன்.) - திருக்கண்களும் திருப்பவளமும் திருக்குழல்களும் திருத்தோள்கள் அழகும் என்னெஞ்சைநின்று ஈராநிற்கச்செய்தே, அதின்மேலே தண் வாடைமுதலாயுள்ள இவையும் காலாக்நிபோலே என்னை ஊஹியாநின்றன: வண்டுகள் பூமாலையைப்புஜித்தாற்போலே பெரியதிருவடிமேலே ஏறியருளிவந்து ஆத்தஸாரமாம்படி பென்னை ஸம்ஜித்தருளினப்ரகாசம்நின்று பாதியாநின்றது; இவ்வாத்மாவினளவின் றியே இப்படி அபர்யந்தபாதகங்கள் பாதியாநின்றன; இவையெல்லாம் பொறுக்கலா மிறே ஒருதுணையுண்டாகில்; என்னெஞ்சுங்கூடத் துணையன்றியேபோய்த்து என்கிறாள்.

ஓ.—நாலாம்பாட்டில், அவனுக்கு ஸ்மாரகமாய் அவ்வழியாலே நலிகை யன்றிக்கே தானே தனித்தனியே அஸஹ்யமாய் ஊஹியாநின்றன என்கிறாள்.

[வாடையென்று தொடங்கி] - தண்வாடையான வாடையும் வெவ்வாடை ஆகாநின்றது. எல்லாராலும் ஸ்ப்ருஹபண்ணப்படும் குளிர்ந்த சந்த்ரன் அஸஹ்யசந்த் ரனாகாநின்றான். ம்ருதுவான மலராலேசெய்த படுக்கை வெவ்வியபள்ளியாய் நலியா நின்றது. பெரியதிருவடியையுடைய தெய்வமாகிற வண்டாலே ஆத்தஸாரமான என் னுடைய பெண்மையாகிறபூ ஏவம்விதமாய் நலிவுபடாநின்றது. [ஆவியின் பரமல்லவகை களாலோ] - பாதகங்களினுடையபடி இவ்வாத்மாவின் அளவல்ல. பண்டு இவன் ஸம்ஜித்த படிகளை நினைக்க அவை பாதிக்கிறபடி யென்றுமாம்.

ப.—அநந்தரம், அஸிருபமான கருடவாஹநத்தையுடையவன் ஸம்ஜித்த ஆஸ்ரயமும் ஈடுபடும்படி நெஞ்சுதுணையாகிறதில்லை; ஆஸ்ரயத்துக்குத் தகுதியன்றியே லோகாநுகூலபதார்த்தங்கள் எனக்கு பாதகங்களாகாநின்றனவென்கிறாள்.

பாவியேன்மனத்தே-(ஸர்வாநுகூலமானவையும் ப்ரதிகூலமாம்படி) பாபத்தை யுடையேனான என்னெஞ்சிலே, நின்று-(தோற்புரையேபோகாமல்) ஒருபடிப்படநின்று, வாடை - வாடை, ஈரும் - ஈராநின்றது; தண் வாடை - (அவனுடைய ஸம்ஸ்லேஷ தசையில் என்னோடு நாட்டோடு வாசியறக்) குளிர்ந்து அநுகூலமான வாடையானது, வெவ்வாடை - ("பனிப்பியல்வெல்லாம் தவிர்ந்தெரிவீசும்" என்கிறபடியே) வெவ்விய வாடையாகாநின்றது; மேவு - ஸர்வர்க்கும் ஆஸ்வாஸகரமாம்படி செறியப்படும், தண் - குளிர்ந்த, மதியம் - சந்த்ரனானவன், வெம்மதியம் — நெருப்பைச் சொரியாநின்றான்; மென்மலர்ப்பள்ளி - ம்ருதுவான புஷ்பத்தாலே படுக்கப்பட்ட படுக்கையானது, வெம் பள்ளி - பண்டுபோலன்றியே அஸஹ்யமான படுக்கையாகாநின்றது; அம் - ஸ்ப்ருஹணீய மான, தூவி - சிறகையுடையனான, புள் - பெரியதிருவடியை, உடை - வாஹநமாக வுடைய, தெய்வம் - பரதேவதையாகிற, வண்டு - வண்டானது, துதைந்த-விமர்த்தித்து

ஸாஜிக்கையாலே ஆத்தஸாரமான; எம் பெண்மை - என்னுடையஸ்த்ரீத்வமான, இது - இது, அம் பூ-(பரிதாபஸஹமல்லாத) ஸுகுமாரமான பூவென்னலாயிராநின்றது; ஆவியின் பரமல்ல - இவ்வாத்மாவுக்குப் பொறுக்கலாவனவல்ல, வகைகள் - அவனுடையஸம்ஶ்லேஷ விஶ்லேஷப்ரகாரங்களும், பாத்யகபதார்த்த ப்ரகாரங்களும், (ஆற்றியிருக்கலாம்படி), யாமுடை - நாம் கரணமாகவுடையோமான, நெஞ்சமும் - நெஞ்சானது, துணையன்று - உசாத்துணையாகிறதில்லை. துதைகை - மிதிக்கை.

இ.—நாலாம்பாட்டில், அகவாயிலேநின்று நலிகிறவையொழிய ஸ்வரூபேண வந்து ஸ்பர்ஶாதிகளாலே ஸ்மாரகமாய்நின்று நலிகிற பதார்த்தங்களைச் சொல்லுகிறாள்.

[பாவியேன் இத்யாதி] - நாட்டார் இவ்வழகை வலிய நெஞ்சிலே வைத்துப் பாபத்தைப்போக்கிக் கொள்ளாநிற்பர்கள் கிடீர்! இவ்வடிவையிறே ஸாஶ்ரயமாக ஹாவித்து அநிமதங்களைப்பெறுவது? [வாடையித்யாதி] - உட்பகையேயாய்ப் புறப்பகை அற்றிருக்கப்பெற்றேனோ? குளிர்த்தியே ஸ்வபாவமாக உடைத்தான வாடையும் அக்நி கல்பமாய் நலியாநின்றது. தண்வாடையென்று - தாய்மார் வார்த்தைகேட்டுச் சொல்லுகிறாள்; அதுவும் விபரீதமாயாய்த்திருக்கிறது. [மேவு தண்மதியம்] - நாட்டார் தாபத்துக்கஞ்சி நிலாவிலே ஒதுங்கக்காண்கையாலே தானும் அதிலே ஒதுங்கப் பார்த்தாள்; அவனும் அக்நிமயசந்த்ரனாகாநின்றான். [மென்மலர்பள்ளி வெம்பள்ளியாலோ] - புறம்புள்ளவை பாதகமாகப் புக்கவாறே அவற்றுக்கஞ்சி படுக்கையிலே சென்றுவிழுந்தாள். ம்ருதுவான மலராலேசெய்த படுக்கை தாபஹேதுவாய் நலியாநின்றது. பழையநிலாவும் வாடையும் நன்றாம்படியாய்த்து. இருவருக்குப் படுத்தபடுக்கை ஒருவர்க்கு பாதகமாமிறே. [தூவியம் இத்யாதி] - பெரியதிருவடியையுடைய தெய்வமாகிறவண்டாலே ஆத்தஸாரமான என்னுடைய பெண்மையாகிறபூ ஏவம்விதமாய் நலிவுபடாநின்றது. படுக்கை பாதகமானவாறே புறம்பே புறப்பட்டாள்; ஸ்வரூபாநுபந்தியான ஸ்த்ரீத்வம் ஶிதிலமாகத் தொடங்கிற்று. தூவி - சிறகு. அழகியசிறகையுடையனாய் தர்ஶநீயவேஷனை பெரிய திருவடியையுடைய முதுகிலே வந்தாய்த்து ஸ்த்ரீத்வத்தை அழித்தது. ப்ருஙவாஹநனிறே பரதேவதையாவான். 'இது' என்கிறது - ஸ்த்ரீத்வம் அழிந்தபடி பேச்சுக்கு நிலமல்ல என்கிறது. [ஆவியின் பரமல்ல வகைகளாலோ] - கலக்கிறபோது அவன்பரிமாறின வகைகள் ஆஶ்ரயித்தினளவன்று என்னுதல்; பாதகபதார்த்தங்களினுடைய பாரிப்பு ஆத்மவஸ்துவின் அள வன்றென்னுதல். [யாமுடை நெஞ்சமும் துணையன்றாலோ]-புறம்புண்டானவை பாதகமானால் நெஞ்சுண்டாகில் உசாவித்தரிக்கலாமிறே; அதுவும் துணையாகிறதில்லை.

ஈடு.—நாலாம்பாட்டு. அகவாயில் நலிகிறதொழிய ஸ்வரூபேணவந்து ஸ்பர்ஶாதிகளாலே ஸ்மாரகமாய் நின்று நலிகிறபதார்த்தங்களைச் சோல்லுகிறாள்.

---

நாலாம்பாட்டு—பாவியேன் இத்யாதி "வாடை தண்வாடை" என்றுதொடங்கி "எம்பெண்மை' என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - அகவாயில் இத்யாதி 'ஸ்வரூபேணவந்து ஸ்பர்ஶாதிகளாலே ஸ்மாரகமாய்நின்று நலிகி' என்றது - ஸ்வரூபேணவந்தும் ஸ்பர்ஶாதிகளாலும் ஸ்மாரகமாயும் நலிகிறவென்றபடி. ஸ்வரூபேணவந்து நலிகிறபதார்த்தமாவது - ஸ்த்ரீத்வம்; வாடைதொடக்கமானவை - ஸ்பர்ஶாதிகளாலே பாதிக்கிறன; மென்மலர்ப்பள்ளிதொடக்கமானவை - ஸ்மாரகமாய் பாதிக்கிறனவென்றபடி.

பெருமானையே]-திருக்கண்ணபுரத்திலேவந்து எளியனாயிருக்கிறவன் உபயவிபூதிநாயகனாய்த்து. பரமபதநிலயனாய் அயர்வறுமமரர்கள் அதிபதியுமானவன் என்னுதல், லீலாவிபூதிக்கு நிர்வாஹகனுமாய் நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவன் என்னுதல். இங்கே ஆஶ்ரயித்துவிரோதியைப்போக்கி பூர்ணாநுபவம்பண்ண ஒரு தேஶவிஶேஷம் தேடிப் போகவேண்டா. நித்யஸூரிகளும் இங்கேவந்து அநுபவிக்கும் ஶீலாதிகுணாதிக்யமுண்டு-இங்கு; ஸம்ஸாரிகளுக்குக் கிட்டவொண்ணாத குறையுண்டு பரமபதத்தில்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. திருக்கண்ணபுரத்திலே நின்றருளினவன் உபயவிபூதிநாயகனாய்த்து; உங்கள் து:க்கம்கெட அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆஶ்ரயியுங்கோளென்கிறார்.

[தொண்டர்] - ஆஶாலேஶமுடையாரான நீங்களென்னுதல், அஹம்ஸர்வம் கரிஷ்யாமிக்குஇட்டுப் பிறந்த நீங்களென்னுதல். [நுந்தம்துயர்போக]-துயரும் †இவர்களுக்கு வ்யாவ்ருத்தமாயிறேயிருப்பது:விஷயப்ராவண்யத்தால் வந்த து:க்கமென்னுதல், இறைஞ்சப்பெறாத து:க்கமென்னுதல். [நீரேகமாய்]-நீங்கள்அநந்யப்ரயோஜநரா யென்னுதல், நீங்களெல்லாரும் ஒருமிடறாயென்னுதல். "தொண்டர்" என்கையாலே எல்லாரும் ஒருமிடறாகலாமிறே. [விண்டுவாடாமலர்] - அலரத்தொடங்கினவளவாய்க் கழிய அலர்ந்துவாடாத பூ. செவ்விப்பூவைக்கொண்டு ஆஶ்ரயியுங்கோ ளென்கை. [வண்டுபாடும்இத்யாதி] - வண்டுகள் மதுபாநமத்தமாய்க்கொண்டு பாடாநின்றுள்ள சோலைசூழ்ந்ததேஶம்; "ஏதத்ஸாம காயந்நாஸ்தே" (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்கிறபடியே. நிரதிஶய போக்யமான தேஶமென்கை. [திருக்கண்ணபுரத்தண்டவாணனமரர்பெருமானையே] - திருக்கண்ணபுரத்திலேவந்து எளியனாயிருக்கிறவன் உபயவிபூதிநாதனாய்த்து; பரமபதநிலயனாய், * அயர்வறுமமரர்க ளதிபதியுமானவனென்னுதல்: லீலாவிபூதிக்கு நிர்வாஹகனுமாய்,

மூன்றாம்பாட்டு.—தொண்டர் இத்யாதி "திருக்கண்ணபுரத் தண்டவாணனமரர்பெருமானை - நுந்தம்துயர்போக நீரேகமாய் விண்டுவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - திருக்கண்ணபுரத்திலே இத்யாதி.

"தொண்டர்" என்று - சபலர்க்கும், சேஷவ்ருத்தியில் அந்வயித்திருக்குமவர்களுக்கும் வாசகமாகையாலே, அர்த்தத்வயத்தையும் அருளிச்செய்கிறார் - ஆஶாலேஶம் இத்யாதி வாக்யத்வயத்தாலே. அஹம்ஸர்வம்கரிஷ்யாமிக்கு-"அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்று இளையபெருமாள்ப்ரார்த்தித்த கைங்கர்யங்களுக்கென்றபடி. "துயர்" என்னாதே, "நுந்தம்" என்று விசேஷித்ததுக்கு பாவம் - துயரும் இத்யாதி. இவர்களுக்கு என்று- ஆஶாலேஶமுடையாரையும், கைங்கர்யத்திலே அந்வயிக்கஇட்டுப் பிறந்தாரையும் சொல்லுகிறது. அதேதென்ன - விஷய இத்யாதி. "தொண்டர்" என்றதின் அர்த்தத்வயாநுகுணமாக,"துயர்"என்றதுக்கும் அர்த்தத்வயம் அருளிச்செய்தார்.நீங்கள் அநந்யப்ரயோஜநரா யென்னுதலென்றது - அவன் உங்களிடத்தில் அநந்யப்ரயோஜநனானாற்போலே நீங்களும்அவனோடு ஏகஹ்ருதயரா யென்றபடி. "தொண்டர்" என்று - அண்மைவிளியாய், ஸம்போதிக்கிறது. அண்மைவிளி - ஸாமீப்யாஹ்வாநம். ஒருமிடறாகைக்கடி யேதென்ன - தொண்டரென்கையாலே இத்யாதி. விண்டு - ஈஷத்விகஸிதமாய். ஹலிதம் - செவ்வி இத்யாதி. "வண்டுபாடும்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம்-ஏதத்ஸாம இத்யாதி. ஹலிதம்-நிரதிஶய இத்யாதி. "அண்டவாணன்" என்கையாலே-லீலாவிபூதிநாதத்வமும், "அமரர்பெருமான்" என்கையாலே - நித்யவிபூதிநாதத்வமும் சொல்லுகிறது ; இத்தைக்காட்டுகிறார் - திருக்கண்ணபுரத்திலே இத்யாதி. "அண்டம்" என்று - லீலாவிபூதியாக அருளிச்செய்து,நித்யவிபூதியாக அர்த்தாந்தரம்-பரமபத இத்யாதி. முந்தினவர்த்தத்துக்கு ஶப்தநிர்வாஹப்ரதர்ஶநமுகேந விவரணம் - லீலாவிபூதிக்கு இத்யாதி. "திருக்கண்ணபுரத்திலே வர்த்திக்கிறவன்

† அவர்களுக்கு என்று அடையவளைந்தானிற்பாடம்.

நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனுமானவனென்னுதல். இங்கே ஆஶ்ரயித்து விரோதியைப் போக்கிப் பூர்ணநுபவம்பண்ண ஒருதேஶவிசேஷம் தேடிப்போகவேண்டா: நித்யஸூரிகளும்இங்கேவந்துஅநுபவிக்கும்படியீலாதிகுணாதிக்யம்உண்டிறேஇங்கு. அந்தர்க்குவைத்த சாலையில் விழித்திருப்பார்க்கு உஜ்ஜீவநமில்லையே; அப்படியன்றிறே இங்குத்தை நிலை. "ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்" (ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்) - இதுக்கு ஆளவந்தார் அருளிச்செய்யும்படி - "அம்மேட்டிலும் ஏறிப்பாயா நின்றால் தேசிகருக்குச் சொல்ல வேணுமோ?" என்று. (௩)

---

## நான்காம் பாட்டு.

---

மானைநோக்கி மடப்பின்னைதன்கேள்வனை
தேனைவாடாமலரிட்டு நீர் இறைஞ்சுமின்
வானையுந்தும் மதிள்சூழ் திருக்கண்ணபுரம்
தான்நயந்தபெருமான் சரணாகுமே.

*ஆ. —(மானைநோக்கி.) - எல்லார்க்கும் இனியனைக்கொண்டு நப்பின்னைப் பிராட்டியோடேகூடத் திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளியிருந்த எம்பெருமானுக்கு இப்படி அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு அடிமைசெய்யவே, தன்திருவடிகளில் நித்ய ஸித்தமான கைங்கர்யரூப ஸம்பத்தை யுங்களுக்குத் தந்து ரக்ஷித்தருளுமென்கிறார்.*

*ஒ.—நாலாம்பாட்டில், திருக்கண்ணபுரத்திலே எம்பெருமானை நப்பின்னைப் பிராட்டி புருஷகாரமாக ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.*

*[மானைநோக்கியென்று தொடங்கி] - மான்கள் தோற்கும்படியான நோக்கையும் ஸ்த்ரீத்வத்தையுமுடைய நப்பின்னைப்பிராட்டிக்கு நாயகனைப் நிரதிஶயபோக்யனை வனைச் செவ்விப்பூவையிட்டு நீங்கள் தொழுங்கோள். [வானையுந்துமதிளென்றுமேலுக்கு] - மிகவும் உயரிதான மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரத்தை ஆதரம்பண்ணின ஸர்வேஶ்வரனானவன் தான் உங்களுக்கு ரக்ஷகனும்.*

*ப.—அநந்தரம், அதிஶயிதபோக்யனான க்ருஷ்ணனை, நப்பின்னைப்பிராட்டி சேர்த்தியிலே ஆராதியுங்கோள் என்கிறார்.*

*மான் - மானனது, நை - (தோற்று)நையும்படியான, நோக்கி - நோக்கை யுடையளாய், மடம் - ஆத்மகுணபூர்ணையான, பின்னைதன் - நப்பின்னைப்பிராட்டிக்கு,*

---

உபவிஹ்ருதிநாமுன்" என்றதால் பாவம் - இங்கேயாஶ்ரயித்து இத்யாதி. ஸம்ஸாரிகளுக்காக நிற்கிறநிலையிலே நித்யஸூரிகளுக்கு ப்ராப்தியில்லையேயென்ன - அந்தர்க்கு இத்யாதி. இத்தால் - ஸர்வ ஸமாஶ்ரயணீயனென்றபடி. ஸர்வஸமாஶ்ரயணீயனானால் "ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம்" என்றது சேரும்படியென்? இந்தவசநத்திலே நித்யஸூரிகளுக்கு ப்ராப்தியில்லையென்று தோற்றாநின்றதேயென்ன - ப்ரதிமாஸ்வ இத்யாதி. அம்மேடென்றது - அப்ரபுத்தரை. அப்ரபுத்தாநாமபி என்று ஆளவந்தாருக்குக்கருத்து. "ஸ்வர்கே திஷ்டிவிப்ராணாம் ஹ்ருதி திஷ்டியோகிநாம் । ப்ரதிமாஸ்வப்ரபுத்தாநாம் ஸர்வத்ர ஸமதர்ஶிநாம்." 'வண்டுபாடும்' என்றுதொடங்கி, 'பெருமானை - தொண்டரென்று, இறைஞ்சுமின்' இத்யந்வயம். (௩)

கேள்வனை - வல்லபனாய், தேனை - ("ரஸோவைஸ:" என்கிறபடியே) தேன்போலே போக்யனானவனை, வாடா-வாடாத, மலர்இட்டு - புஷ்பங்களைக்கொண்டு, நீர்-நீங்கள், இறைஞ்சுமின் - ஆராதியுங்கோள்; வானை - ஆகாசத்தை, உந்து - தள்ளும்படியோங்கின, மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த, திருக்கண்ணபுரம் - திருக்கண்ணபுரத்தை, ("ஆஶ்ரிதர்க்கு முகங்கொடுக்கைக்கு யோக்யஸ்தலம்" என்று), தான் நயந்த - தானே விரும்பின, பெருமான் - ஸர்வேஶ்வரன், சரண் ஆகுமே - அவ்வாஶ்ரயணீயவேஷந்தன்னிலே யுங்களுடைய ஆராய்ப்ரதிஸம்பந்தியாய்க்கொண்டு ரக்ஷகனாமே. தேனை வாடாமலரென்று பூவோடே கூட்டவுமாம்.

இ—நாலாம்பாட்டில், ஆஶ்ரயிக்குமிடத்தில் நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக ஆஶ்ரயியுங்கோள்; அவன் உங்களுக்கு ரக்ஷகனென்கிறார்.

[மானைநோக்கி] - மானுனது நையும்படியான நோக்கையுடையவள். மான் தோற்று நாணும்படியாய்த்து நோக்கிருப்பது. [மடப்பின்னைதன் கேள்வனை] - ஸ்த்ரீத்வம் முதலான ஆத்மகுணங்களையுடைய நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனானவனை. [தேனை] - நிரதிஶயபோக்யனானவனை. இதிறே நான்உங்களுக்குச்சொல்லுகிற வேப்பங்குடி நீர். [வாடாமலரிட்டு நீர்இறைஞ்சுமின்] - செவ்விப்பூவையிட்டு நீங்கள் ஆஶ்ரயியுங்கோள். தேனையும் செவ்விப்பூவையும் சேர்க்கைபோலே காணும் ஆஶ்ரயணமாவது. [வானையித்யாதி] - ஆகாஶத்தோடே ஸ்பர்த்தைபண்ணி அத்தைத் தள்ளுமாபோலே இருக்கிறமதிளாலே சூழப்பட்டவூர். துஷ்ப்ரக்ருதிகளுக்குக் கிட்டவொண்ணாதபடி ஸுரக்ஷிதமான ஊர்என்கை. [தான்நயந்த பெருமான்] - ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்துக்குப்பாங்கான தேஶம் என்று அத்தைவிரும்பி வர்த்திக்கிற ஸர்வேஶ்வரனானவன். [சரணாகுமே] - உங்களுக்கு ரக்ஷகனும். அம்மதிள் அவனுக்கு அரணுமாபோலே, உங்களுக்கு அவன் மதிளாம்.

ஈடு.— நாலாம்பாட்டு. ஆஶ்ரயிக்குமிடத்தில் நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாக ஆஶ்ரயியுங்கோள்: அவன் உங்களுக்கு ரக்ஷகனும் என்கிறார்.

[மானைநோக்கி] - மானுனது நையும்படியான நோக்கையுடையவள். மான் தோற்று நாணும்படியாய்த்து நோக்கிருப்பது. [மடப்பின்னைதன் கேள்வனை] - ஸ்த்ரீத்வம் முதலான ஆத்மகுணங்களையுடைய நப்பின்னைப்பிராட்டிக்கு வல்லபனுயுள்ளவனை. [தேனை] - நிரதிஶயபோக்யனானவனை. இவ்வேப்பங்குடிநீரையன்றே நானஉங்களைக் குடிக்கச்சொல்லுகிறது. [வாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின்] - செவ்விப்பூவிட்டு நீர்ஆஶ்ரயியுங்கோள். தேனையும் செவ்விப்பூவையும் சேர்க்கைபோலேகாணும் ஆஶ்ரயணமாவது. [வானையித்யாதி] - ஆகாஶத்தோடே ஸ்பர்த்தைபண்ணி அத்தைத் தள்ளுமாபோலேயிருக்கிற மதிளாலே சூழப்பட்டவூரை. துஷ்ப்ரக்ருதிகளுக்குக் கிட்டவொண்ணாதபடி ஸுரக்ஷிதமான ஊரேன்கை. [தான்நயந்தபேருமான்] - "ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்துக்குப்

நாலாம்பாட்டு.—மானை இத்யாதி. "பின்னைதன்கேள்வனை - இறைஞ்சுமின்: பெருமான் சரணாகும்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஆஶ்ரயிக்கும் இத்யாதி-

மான் நையும்படியான நோக்காவதேதென்ன - மான்தோற்று இத்யாதி. "நை" என்று - கடைக்குறைத்தலாய், நையுமென்றபடி. வ்யங்க்யோக்தி - இவ்வேப்பங்குடி இத்யாதி. அதாவது - நிரவதிகபோக்யனென்றபடி. "தேனைவாடாமலரிட்டு" என்ற பதச்சேர்த்திக்கு பாவம் - தேனையும் இத்யாதி. உந்துதல் - தள்ளுதல். இத்தால்பாவம் - துஷ்ப்ரக்ருதிகளுக்கு இத்யாதி. நயந்த - விரும்

பாங்கான தேஶம்" என்று அத்தை விரும்பிவர்த்திக்கிற ஸர்வேஶ்வரனானவன். [சரணுமே] - உங்களுக்கு ரக்ஷகனும், அம்மதிள் அவனுக்கு அரணானாற்போலே உங்களுக்கு அவன் மதிளாம். (ச)

## ஐந்தாம் பாட்டு.

சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்
மரணமானால்வைகுந்தங்கொடுக்கும்பிரான்
அரணமைந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன் தனதன்பர்க்குஅன்பாகுமே.

ஆ.—(சரணமாகும்.) - இப்படி ஶக்தியோகத்தாலே அவனை ஆஶ்ரயிக்க க்ஷமரன்றியே தன்திருவடிகளையே யுபாயமாகப்பற்றினார்க்கு ஒருபடியாலன்றியே எல்லாப்படியாலும் ரக்ஷகனாய், அப்போதே அவர்களை இப்ப்ரக்ருதியை விடுவித்துத் திருநாட்டிலேகொண்டுபோய்த்திவ்யப்ரக்ருதிகளாக்கி அவர்களோடே ஸம்ஶ்லேஷித்தல்லது தரிக்கமாட்டாதிருக்கச்செய்தே, அவர்களுக்கு இப்ப்ரக்ருதிஸம்பந்தம் அநாதிவாஸனையாலே ஸஹ்யமாயிருக்கையாலே, க்லுப்தகாலத்திலே இப்ப்ரக்ருதிதானேவிட்டால் திருநாட்டைக்கொடுத்தருளி, பின்னையும் அவர்கள்பக்கலுள்ள ஸ்நேஹத்தினாலே தான் ஒன்றும் செய்யாதானாய், இவர்களுக்கு எத்தைச்செய்வேன் என்றிருக்குமென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், இப்படி ஶக்தியோகத்தால் அவனைஆஶ்ரயிக்க க்ஷமரன்றிக்கே தன்திருவடிகளை உபாயமாகப்பற்றினார்திறத்திற் செய்தருளும்படியை அருளிச்செய்கிறார்.

[சரணமென்று தொடங்கி] - தன்திருவடிகளையே உபாயமாகப்பற்றினார் ஜந்மவ்ருத்தாதிகளால் குறையநின்றாரேயாகிலும் அவர்களுக்கு ரக்ஷகனும். மேலும் "எல்லாம்" என்றவற்றுக்குப் பொருள் இப்படியே. [மரணமென்று தொடங்கி] - ப்ரபந்நரானபின்பு அவர்களைபொழியத் தனக்குச் செல்லாதிருக்கச்செய்தே அவர்கள் இசையக்கொண்டுபோய் ஶரீராவஸாநத்திலே மஹோபகாரத்தைக்கொடுக்கும் மஹோபகாரகன். பண்டுவாஸிதமான விஷயங்கள் இந்தஶரீரத்தோடேபோம்; இனி, ஒரு ஶரீரத்திலே ப்ரவேஶித்து விஷயங்களிலே நசைபண்ணுவதுக்கு முன்பில் உஶையிலே மிகவும் போக்யமான தன்னழகைக்காட்டி இவனை இசைவித்து அப்போதே விஷயீகரிக்கும் என்றுகருத்து. [அரணமைந்த மதிளென்று மேலுக்கு] - அரணமாகப்போரும் மதிள் சூழ்ந்த திருக்கண்ணபுரத்திலே யிருந்து ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷகனானவன் தனக்கு ஸ்நேஹிகளானவர்க்கு மிகவுஂஸ்நேஹியாம்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதர்க்குப் பரமபதப்ரதனானவன், ஸ்வவிஷயத்தில் கைங்கர்யாதி நிவிஷ்டரானார்க்கு, அதிநிவேஶந்தான் ஒருவடிவுகொண்டாற்போலேயாம் என்கிறார்.

---

பின. நயக்கை - விருப்பம். "மதிள்" என்ற விசேஷணம் த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் - அம்மதிள் இத்யாதி. (ச)

தனதாளடைந்தார்க்கெல்லாம் - தன் திருவடிகளைக்குறித்து ப்ரபத்திபண்ணின ஸர்வாதிகாரிகளுக்கும், சரணமாகும் - தானேயுபாயமாதலைக்கொண்டு, மரணமானால் - அவர்களுடைய ம்ரியமாணஉஸையில், வைகுந்தம் - அப்ராக்ருத திலக்ஷணமான தேசத்தை, கொடுக்கும்—, பிரான் - மஹோபகாரகனாய், அரண் அமைந்த - க்ஷேமங்கரமாம்படி சமைந்த, மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த, திருக்கண்ணபுரம் - திருக்கண்ணபுரத்திலே, தரணியாளன் - பூமியைரக்ஷிக்கைக்காகவந்து நிற்கிறவன், தனதன்பர்க்கு - தன் திருவடிகளில் ப்ராவண்யமுடையார்க்கு, அன்புஆகும் - ப்ராவண்யந்தான் ஒருவடிவுகொண்டாற்போலேயாம். 'சரணமாகும் தனதாள்' என்று - உபாயமான திருவடிகளென்றுமாம். தரணியாளனென்று - ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு வல்லபன் என்றுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், இப்படி பக்தியோகத்தால் ஆச்ரயிக்க க்ஷமரன்றிக்கே தன் திருவடிகளை உபாயமாகப் பற்றினார்திறத்தில் செய்தருளும்படியை அருளிச்செய்கிறார்.

[சரணமாகும் இத்யாதி] - ஜந்மத்தாலும் வ்ருத்தத்தாலும் ஜ்ஞாநத்தாலும் குறையநின்றாரேயாகிலும் தன்திருவடிகளே உபாயமாகப் பற்றினார்க்கெல்லாம் ரக்ஷகனும். கீழ் மூன்றுபாட்டாலும் சொன்ன பக்தியோகம் அதிக்ருதாதிகாரம். இதில் சொன்ன ப்ரபத்தி ஸர்வாதிகாரமென்கிறது. [மரணமானால் இத்யாதி] - தன்பக்கலிலே ந்யஸ்தபரனானவன்று தொடங்கி, இவனையொழியத் தனக்குச் செல்லாதிருக்கச் செய்தே இவனுடைய ருசியைவர்த்தித்து சரீராவஸாநத்திலே பரமபதத்தைக் கொடுத்த மஹோபகாரகன். தன்னழகைக்காட்டி அத்தாலே இவற்றுக்கு ருசிபிறக்குமளவும் அவஸரப்ரதீக்ஷனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. [மரணமானாலென்று] - தனக்கு அசக்தியில்லை; இவனுக்குக் கர்த்தவ்யமில்லை; இவன்ருசியைக் கடாக்ஷித்திருக்கிறவித்தனை. இப்பாட்டில் "மரணமானால்" என்றதைக்கொண்டிறே கீழ்ச்சொன்ன நிரூபணமெல்லாம். [அரணமைந்த மதிள்] - 'நித்யஸூரிகள் பரியவிருக்கிறவன் இங்கே வந்துநின்றான்: என் வருகிறதோ?' என்று அஞ்சவேண்டாதபடியிருக்கை. [தரணியாளன்] - பூமிக்கு நிர்வாஹகன். ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷகனென்கை. [தனதன்பர்க்கன்பாகுமே] - தனக்கு ஸ்நேஹிகளானார்பக்கல் அதிப்ராவணனும். [அன்பாகும்] - அன்புடையன் என்று பிரிக்கவொண்ணாதபடி அன்புதான் ஒருவடிவு கொண்டாற்போலேயிருக்கை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. இப்படி பக்தியோகத்தால் ஆச்ரயிக்க க்ஷமரன்றிக்கே தன்திருவடிகளையே யுபாயமாகப்பற்றினார்திறத்து அவன் செய்தருளும்படியை யருளிச்செய்கிறார்.

[சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்] - ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களால் குறையநின்றாரேயாகிலும், தன்திருவடிகளையே யுபாயமாகப் பற்றினார்க்கெல்லாம் ரக்ஷகனும். கீழ்மூன்றுபாட்டாலும் சொன்ன பக்தியோகம் அதிக்ருதாதிகாரம், இதில்சொல்லுகிற

---

அஞ்சாம்பாட்டு— சரணமாகும் இத்யாதி. "வைகுந்தங்கொடுக்கும்பிரான்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை- இப்படி இத்யாதி.

"எல்லாம்" என்றதுக்கு பாவம் - ஜந்மவ்ருத்த இத்யாதி. இத்தால்பலிதம் - கீழ்மூன்று பாட்டாலும் இத்யாதி. முதற்பாட்டு இத்திருவாய்மொழிக்காக ஸங்க்ரஹமாகையாலே, அத்தைவிட்டு மற்றைமூன்று பாட்டாலும்சொன்ன பக்தியோகமென்றபடி. இது ஸர்வாதிகாரமாகைக்கு

ப்ரபத்தி ஸர்வாதிகாரமென்கிறது; "ஸமோஹம்ஸர்வபூதேஷு"(ஸமோஹம்ஸர்வபூதேஷு) என்னக்கடவதிறே. பகவத்விஷயந்தான் ஸ்பர்ஶவேதியாயிருக்குமிறே; கைசிகத்தில் பகவத்ஸம்பந்தமுடையானொருசண்டாளனோட்டை ஸம்பாஷணம் ப்ராஹ்மணனுடைய ஆசாரவைகல்யத்துக்குப் பரிஹாரமாய்த்து; அவ்விடத்திலெல்லாம் சொல்லுகிற அர்த்தம் இதுவேயாய்த்து. [மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான்] - இவன் தன் பக்கலிலே ந்யாஸம்பண்ணினவன்றுதொடங்கி இவனையொழியத் தனக்குச்செல்லாமையுண்டாயிருக்கச்செய்தேயும், இவனுடைய ருசியை யநுவர்த்தித்து, ஶரீரவிஶ்லேஷத்தளவும் அவஸரப்ரதீக்ஷனாய்நின்று, பின்னையதுண்டானால் பரமபதத்தைக்கொடுக்கும் உபகாரகன். தன்திருவடிகளைப்பற்றினவன்றே தானிருக்கிறவிடத்திலே இவனைக்கொடுபோய்ச் சேரவைத்துக்கொள்ளவேண்டியிருக்கச்செய்தேயும், நடுவுஇவனிருக்கும் நாலுநாளும் அவனுக்கு*ஒருபகலாயிரமூழியாயிருக்கையாலே 'மரணமானால்' என்கிறது. "மரணமானால்" என்கிறது - தனக்குஅஶக்தியில்லை, இவனுக்குக் கர்த்தவ்யமில்லை, இவன்ருசியைக்கடாக்ஷித்து நிற்கிறவித்தனை. இப்பாட்டில்"மரணமானால்"என்றத்தைக்கொண்டிறே கீழ்ச்சொன்ன நிரூபணமெல்லாம். [அரணமைந்த] - 'நித்யஸூரிகள் பரியவிருக்கிறவன் இங்கேநின்றான்; என்வருகிறதோ?'என்றுஅஞ்சவேண்டாதிருக்கை. அரணமாம்படி சமைந்த:[தரணியாளன்]- பூமிக்கு நிர்வாஹகன். ஸம்ஸாரிகளுக்கு ரக்ஷகனென்கை. [தனதன்பர்க்கன்பாகுமே] - தனக்கு ஸ்நேஹிகளானவர்பக்கல் அதிப்ரவணனும். [அன்பாகும்] - "அன்புடையவன்" என்று பிரிக்கவொண்ணாதபடி அன்புதான் ஒருவடிவுகொண்டாற்போலேயிருக்கை. (௫)

---

உபபத்தியருளிச்செய்கிறார் - ஸமோஹமித்யாதி. "ஸமோஹம் ஸர்வபூதேஷு நமே த்வேஷ்யோஸ்தி நப்ரிய: । யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம்" இதி கீதாயாம் நவமே. இந்தப்ரபத்திக்கு விஷயபூதனான ஈஶ்வரன் தாரதம்யம்பாராதே விஷயீகரிக்குமென்கையாலே ப்ரபத்தியும் ஸர்வாதிகாரமென்று இவ்வாக்யத்துக்கு பாவம். அசுத்தரும் பகவத்விஷயத்துக்கு அதிகாரிகளோவென்ன - பகவத்விஷயந்தான் இத்யாதி. அதாவது - அசுத்தரையும் சுத்தராக்குமெனறபடி. அப்படி பகவத்விஷயந்தான் ஸ்பர்ஶவேதிபோலே அசுத்தரையும் சுத்தராக்கினவிடமுண்டோவென்ன; ஸாக்ஷாத ஸ்வஸம்பந்திகளையேயன்றிக்கே தத்ஸம்பந்திஸம்பந்திகளையும் ஶுத்தராக்குமென்கிறார் - கைசிகத்தில் இத்யாதி. "ஆனால்" என்றபதியஶப்தார்த்தம் - இவன்தன்பக்கலிலே இத்யாதி. அது - ஶரீரவிஶ்லேஷம். இதுதன்னை ஸ்பஷ்டமாகக் காட்டுகிறார் - தன்திருவடிகளை இத்யாதி. இவனுடைய ருசியாலே நடுவிருக்கும் நாலுநாளும் என்று கூட்டுவது. ஒருபகல் ஆயிரமூழியாயிருக்கிறது. அஶக்தியாலே யானாலோ? என்ன - மரணமானலென்கிறது இத்யாதி. ப்ரவேஶத்திற்சொன்ன நிரூபணத்துக்கெல்லாம் ஶப்தநிர்வாஹம் இதுவென்கிறார் - இப்பாட்டில் இத்யாதி. கீழ்ச்சொன்ன - ப்ரவேஶத்திலேசொன்ன. பதப்ரயோகத்துக்கு பாவம் - நித்யஸூரிகள் இத்யாதி. அரணமாம்படிசமைந்த-ரக்ஷகமாம்படி சமைந்தவென்று ஶப்தார்த்தம். திருக்கண்ணபுரத்திலேயிருக்கிற தரணியாளனென்றபடி. "அன்பாகும்" என்றால் அதிப்ரவணனென்று தோற்றுமோ? என்ன—அன்புடையவனென்று இத்யாதி. 'அரணமைந்த' என்று தொடங்கி, 'தரணியாளனை - பிரான் - தனதாளடைந்தார்க்கெல்லாம் - சரணமாகும் - தனதன்பர்க்கன்பாகும் - மரணமானால் வைகுந்தம் கொடுக்கும்' என்றந்வயம். (௫)

---

'அரணமாம்படி சனமந்த' என்பது ஸ்ரீகோஶங்களிற் காணவிடினும், அரும்பதத்தை நோக்க, இருக்கவேணுமென்று தோன்றுகின்றது.

## ஆறாம் பாட்டு.

அன்பனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம்
செம்பொனாகத்துஅவுணனுடல்கீண்டவன்
நன்பொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்து
அன்பன்நாளுந்தனமெய்யர்க்குமெய்யனே.

ஆ.—(அன்பனாகும்.) - இப்படி தன்திருவடிகளிலே அநந்யப்ரயோஜநமான ஸ்நேஹத்தையுடையரானவர்கள்பக்கல், தானும் என்றும் அநந்யப்ரயோஜநமான ஸ்நேஹத்தையுடையனாய், ஸ்வாநுபவவிரோதிகளையும் தானே போக்குமென்கிறார்.

ஒ.—ஆறாம்பாட்டில், திருக்கண்ணபுரத்தில் எம்பெருமான் ஆஸ்ரயிப்பாருடைய ப்ரதிபந்தகங்களைப்போக்கி அவர்களுக்கு மிகவும் ஸ்நேஹிபாமென்கிறார்.
[செம்பொனாகத்தவுணன்]-ஹிரண்யன். [நன்பொனென்று மேலுக்கு]-"ஆஸ்ரிதவிஷயீகாரத்துக்கு உறுப்பான தேஶம் என்று நல்ல பொன்னாலே செய்யப்பட்ட மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரத்துக்கு ஸ்நேஹியானவன் தன்திறத்து அநந்யப்ரயோஜநராயிருப்பார்க்குத் தானும் என்றும் அநந்யப்ரயோஜநனாயிருக்கும்.

ப.—அநந்தரம், ப்ரஹ்லாதனுடைய ஸ்வாநுபவவிரோதியான ஹிரண்யனைப்பிளந்தவன், தன்பக்கல் பாரமார்த்திக ப்ரேமமுடையார்க்குப் பாரமார்த்தஸௌஹ்ருதனும் என்கிறார்.

தனதாளடைந்தார்க்கெல்லாம் - தன்திருவடிகளை ஆஸ்ரயித்தார்க்கெல்லாம், அன்பனாகும் - நிரவதிகவாத்ஸல்யயுக்தனாய், செம் - சிவந்த, பொன் - பொன்போலேயிருக்கிற, ஆகத்து - வடிவையுடையனான, அவுணன் - ஹிரண்யாஸுரனுடைய, உடல் - ஶரீரத்தை, கீண்டவன் - அநாயாஸேந கிழித்தவனாய், (அப்படி ஆஶ்ரிதவிரோதிகளைப் போக்கி அடிமைகொள்ளுகைக்காக), நன்பொன் - நன்றானபொன்னாலே, ஏய்ந்த-சமையப்பட்ட, மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த, திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே, அன்பன் - விரும்பிவர்த்திக்குமவன், தன்மெய்யர்க்கு - தன்பக்கல் பாரமார்த்திகப்ரயோஜநபுத்தி யுடையார்க்கு, நாளும் - என்றுமொக்க, மெய்யன் - (தானும்அவர்கள்பக்கலிலே) பாரமார்த்திக ப்ரயோஜநபுத்தியுடையனாயிருக்கும்.

இ.—ஆறாம்பாட்டில், தன்னை ஆஸ்ரயிப்பாருடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கி அவர்களுக்கு மிகவும் ஸ்நேஹியாம் என்கிறார்.
[அன்பனாகும் இத்யாதி] - தன்திருவடிகளே உபாயமென்று பற்றினார்க்கு, "ஶரணாகதவத்ஸல:" என்கிறபடியே அவர்கள் தோஷம் தோன்றாதபடி வ்யாமுக்தனாயிருக்கும். "தொஷொயத்யபிதஸ்யஸ்யாத்ஸ".இவர்களுடைய விரோதிசெய்வது என்? என்னில் ; ஸ்ரீப்ரஹ்லாதனுடைய விரோதி பட்டதுபடும். ஹிரண்யனாகிற அஸுரனுடைய ஶரீரத்தை அநாயாஸேந கிழித்தவன். [நன்பொன் ஏய்ந்தமதிள்] - நல்லபொன்னாலே செய்யப்பட்ட மதிள்: ஸ்ப்ருஹணீயமான மதிளொன்கை. [திருக்கண்ணபுரத்தன்பன்] - ஆஸ்ரிதரக்ஷணத்துக்கு உறுப்பானதேஶம் என்று அவன்விரும்பி வர்த்திக்கிறவனர். [தனமெய்யர்க்கு - நாளும் மெய்யனே] - தன்பக்கல் அநந்யப்ரயோஜநராயிருப்

பார்க்கு என்றுமொக்கத் தான் அநந்யப்ரயோஜநனுயிருக்கும். தன்பக்கல் மித்ரபாவமுடையார்க்கு "நத்யஜேயம்" என்றிருக்கும் அவன்.

ஈடு.— ஆறும்பாட்டு. தன்னை ஆஸ்ரயிப்பாருடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கி அவர்களுக்கு மிகவும் ஸ்நேஹியாமென்கிறார்.

[அன்பன் இத்யாதி] - தன் திருவடிகளையே உபாயமாகப் பற்றினார்க்கு, "ஶரணாகதவத்ஸலஃ" (ஶரணாகதவத்ஸலஃ) என்கிறபடியே அவர்கள் தோஷம் தோற்றாத படி வ்யாமுக்தனுயிருக்கும்; "தோஷோயத்யபி தஸ்யஸ்யாத்" (தோஷோயத்யபி தஸ்யஸ்யாத்). இவர்களுடைய விரோதி செய்வதென்னென்னில்?—ப்ரஹ்லாதனுடைய விரோதி பட்டது படும். ஹிரண்யனுகிற அஸுரனுடைய ஶரீரத்தை அநாயாஸேந கிழித்தவன். [நன்பொனேய்ந்தமதிள்] - நல்லபொன்னாலே செய்யப்பட்ட மதிள்; ஸ்ப்ருஹணீயமான மதிள்என்கை. [திருக்கண்ணபுரத்தன்பன்] - "ஆஶ்ரிதரக்ஷணத்துக்குப் பாங்கானதேஶம்" என்றுவிரும்பி வர்த்திக்கிற ஊர். [நாளும்தனமெய்யர்க்குமெய்யனே] - தன் பக்கல் * அநந்யப்ரயோஜநரா யிருப்பார்க்கு, தானும் அவர்கள்பக்கல் என்றுமொக்க அநந்யப்ரயோஜநரா யிருக்கும், தன்பக்கல் மித்ரபாவமுடையார்க்கு "நத்யஜேயம்" (நத்யஜேயம்) என்றிருக்கும் அவன். (சு)

## ஏழாம் பாட்டு.

மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம்
பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம்
செய்யில்வாளையுகளும் திருக்கண்ணபுரத்து
ஐயன்ஆகத்தணைப்பார்கட்கு அணியனே.

ப்ர.—ஸுந்தரகாண்டே உக. ராவணம் ப்ரதிஸீதா. விதித ஸஹிதர்மஜ்ஞஶ்ஶரணாகதவத்ஸலஃ தேநமைத்ரீ பவது தேயதிஜீவிதுமிச்சஸி । உo௰ - யுத்தகாண்டே கஅ. மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந தோஷோயத்யபி தஸ்யஸ்யாத் ஸதாமேதத கர்ஹிதம்.

ஆறும்பாட்டு—அன்பனாகும் இத்யாதி. "செம்பொனாகத்தவுணனுடல் கீண்டவன் • தனமெய்யர்க்கு மெய்யனே" என்றதைக் கடாக்ஷித்தவதாரிகை - தன்னை இத்யாதி.

அப்படி வ்யாமுக்தனேவென்ன - தோஷோயத்யபி இத்யாதி. "விதிதஸ்ஸஹிதர்மஜ்ஞஶ்ஶரணாகதவத்ஸலஃ । தேநமைத்ரீ பவது தேயதிஜீவிதுமிச்சஸி" இதி ஸுந்தரகாண்டே ராவணம்ப்ரதி ஸீதா (உக-உoஙி). "மித்ரபாவேந" இத்யாதி, "தோஷோயத்யபி தஸ்யஸ்யாத் ஸதாமேதத கர்ஹிதம்" இதி யுத்தகாண்டே ராமஃ. (சஅ-ங) திருக்கண்ண புரத்தன்பன் - திருக்கண்ணபுரத்திலே அன்பையுடையவனென்று ஶப்தார்த்தம். தனமெய்யர்க்கு நாளும் மெய்யனென்றபடி. "மெய்" என்று - அநந்யப்ரயோஜநத்தையாக வருளிச்செய்து, மித்ர பாவமாக அர்த்தாந்தரம் - தன்பக்கல் இத்யாதி. அதாவது - மித்ரபாவமொழிய மெய்கூடாமையாலே, மெய் என்று - மித்ரபாவத்தைச் சொல்லுகிறதென்றபடி. 'செம்பொனாகத்து' என்று தொடங்கி, 'திருக்கண்ணபுரத்தன்பனானவன் - தனதாளடைந்தார்க்கெல்லாம் - அன்பனாகும் - தனமெய்யர்க்கு - நாளும் - மெய்யனாம்' என்றந்வயம். (சு)

ஆ.—(மெய்யனுகும்.) - இப்படி அநந்யப்ரயோஜநமாகத் தொழுவார்க்கெல்லாம் தன்னை யுள்ளபடியே காட்டிக்கொடுக்கும்; அநந்யப்ரயோஜநமாகத் தொழாதார்க்கெல்லாம் தன்னை யுள்ளபடி காட்டான். அநந்யப்ரயோஜநமாக ஒரஞ்சலிமாத்ரத்தைப்பண்ண அவன் இப்படி ஸுலபனோவென்னில்; தானே ப்ராப்யன் என்றிருப்பார்க்கு அவன் ஸுலபனும், இவ்விடத்தில் ஒரு ஸந்தேஹமில்லையென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர்க்குத் தான் ஸுலபனாய் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவர்களுடைய அபேக்ஷிதங்களையே கொடுத்துத் தன்னை அகற்றும் என்கிறார்.

[செய்யில்வாளையென்று மேலுக்கு] - அதிஸம்ருத்தமான திருக்கண்ணபுரத்திலே எழுந்தருளியிருக்கிற பரமஶைந்யவானவன் அநந்யப்ரயோஜநரானுர்க்கு ஸுலபனும். இதில் ஒருஸந்தேஹமுமில்லை.

ப.—அநந்தரம், அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனைப்கொண்டு ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவ்வோ ப்ரயோஜநங்களைக்கொடுத்து அகலநிற்கு மென்கிறார்.

விரும்பித்தொழுவார்க்குஎல்லாம் - தன்பக்கலிலே ப்ரயோஜநபுத்திபண்ணி விரும்பி யாஶ்ரயிப்பார்க்கெல்லாம், மெய்யன்ஆகும் - (தன்னுடைய) பாரமார்த்திகமான ப்ராப்யாகாரத்தை யுடையனைப்கொண்டு ப்ரகாஶியாநிற்கும்; புறமேதொழுவார்க்கெல்லாம் - புறம்பே சிலப்ரயோஜநங்களைக் கணிசித்து ததர்த்தமாக ஆஶ்ரயிப்பார்க்கு, பொய்யன்ஆகும் - அந்த ப்ரயோஜநத்தளவைக் கொடுத்துத் தன்னை மறையாநிற்கும்; செய்யில் - தன்னிலமானசெய்யிலே, வாளை - வாளையானது, உகளும் - உகளாநிற்கிற, திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே, ஐயன் - உபயஸாதாரணமாக நிருபாதிக பந்துவாயிருக்கிறவன், ஆகத்தணைப்பார்கட்கு - தங்களகவாயிலே தன்னை ப்ராப்யமாக ஸ்வீகரிப்பார்க்கு, அணியனே - (ஸாதாரணபந்துவாயிருக்கச்செய்தே) அஸாதாரண ஸுலபனும்.

இ—ஏழாம்பாட்டில், அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனாய் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவற்றைக் கொடுத்துத் தான் அகலும் என்கிறார்.

[மெய்யன் இத்யாதி] - அநந்யப்ரயோஜநராய் ஆஶ்ரயிக்குமவர்களாரேனுமாகிலும் அவர்கள் அபேக்ஷிதத்தைமுடிய நடத்தும்; ப்ரயோஜநங்களைப் பற்ற ஆஶ்ரயிப்பார்க்கு வர்த்தகமான அந்தப் பதார்த்தங்களை ஆதரித்துக்கொடுத்தானாய்த் தன்னைக்கொண்டகலும். "க்ருஷ்ணாஶ்ரயா: க்ருஷ்ணபலா:" என்றிருக்கும் பாண்டவர்களுக்கு மெய்யனாயிருக்கும்; படைத்துணை வேண்டிவந்த துர்யோதநனுக்கு நாராயணகோபாலர்களை அடையக் கொடுத்தானாய், தான் பாண்டவர்களுக்காய் நின்று அதுதலையை அழியச்செய்கையாலே பொய்யனாகும் [செய்யில்இத்யாதி] - செய்களிலே மத்ஸ்யமானது உகளித்துவர்த்திக்கிற திருக்கண்ணபுரத்திலேநிற்கிற பரமபந்து. திர்யக்குக்களும் களித்துவர்த்திக்கும்படி ஸௌஹார்த்தமி என்கை. [ஆகத்து இத்யாதி] - தன்னை ஹ்ருதயத்திலே வைப்பார்க்குக் கைபாளாயிருக்கும். அநந்யப்ரயோஜநர்க்கு, "கிங்கராஸ்ஸமவஸ்திதா" என்றிருக்கும்.

ஈடு.—ஏழாம்பாட்டு. அநந்யப்ரயோஜநர்க்கு ஸுலபனாய் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அத்தைக்கொடுத்துத் தான்அகலநிற்குமேன்கிறார்.

[மெய்யனாகும் இத்யாதி] - அநந்யப்ரயோஜநராயிருப்பார்க்கு அவர்களாரேனுமாகிலும் அபேக்ஷிதத்தை முடிய நடத்தும்; புறம்பே ப்ரயோஜநங்களைப்பற்ற ஆஸ்ரயிப்பார்க்கு வ்யங்யகமான அப்புருஷார்த்தங்களை யாதரித்துக் கொடுத்தானாய்த் தன்னைக் கொண்டகலும். "க்ருஷ்ணாஸ்ரயா꞉க்ருஷ்ணபலா꞉" (க்ருஷ்ணாஸ்ரயா꞉க்ருஷ்ணபலா꞉) என்றிருப்பார்க்கு மெய்யனாயிருக்கும்; படைத்துணை வேண்டிவந்த துர்யோதநனுக்கு நாராயணகோபாலர்களையடையக் கொடுத்தானாய், தான் பாண்டவர்களுக்காகநின்று அத்தலையை யழியச்செய்கையாலே பொய்யனாகும். [செய்யில் இத்யாதி] - செய்களிலே மத்ஸ்யமானது உகளித்துவர்த்தியாநிற்கிற திருக்கண்ணபுரத்திலேநிற்கிற பரமஸந்யாஸ. திர்யக்குக்களும் களித்து வர்த்திக்கும்படியான போக்யதையையுடைய தேஸமென்கை. தன்னை ஹ்ருதயத்திலே வைப்பார்க்குக் கையாளாயிருக்கும்; அநந்ய ப்ரயோஜநர்க்கு "கிங்கரௌஸமுபஸ்த்திதௌ" (கிங்கரௌஸமுபஸ்த்திதௌ) என்றிருக்கும். (எ)

---

## எட்டாம் பாட்டு.

அணியனாகும்தனதாளடைந்தார்க்கெல்லாம்
பிணியுஞ்சாராபிறவிகெடுத்தாளும்
மணிபொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமின்நாளும் பரமேட்டிதன்பாதமே.

ஆ.—(அணியன்.) - இப்படி தன்திருவடிகளையே ப்ராப்யம் என்று பற்றினாரெல்லாருடைய து꞉கங்களையும் து꞉கஹேதுவான ஸம்ஸாரத்தையும் போக்கி, அவர்களுக்கு ஸுலபனாம்; ஆதலால், ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருக்குமா

---

ப்ர.—த்ரோணபர்வணி (த்ரோ - கஅரு.) க்ருஷ்ணாஸ்ரயா꞉ இத்யாதிக்கு உத்தரார்த்தம் - க்ருஷ்ண꞉பராயணமேஷாம் ஜ்யோதிஷாமிவசந்த்ரமா꞉ ॥உச॥

---

எழாம்பாட்டு.—மெய்யனாகும் இத்யாதி. பூர்வார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - அநந்ய இத்யாதி.

"எல்லாம்" என்றதைப்பற்ற - அவர்களாரேனுமாகிலும் என்றது. ஆரேனுமாகிலும் என்றது - எத்தனையேனும் நிஹீநஜந்மாக்களேயாகிலு மென்றபடி. முடியநடத்துகைபாவது - ப்ராப்திபர்யந்தமாக நடத்துகை. அநுரூப கைங்கர்யங்களைக் கொடாமையைப்பற்ற - தன்னைக் கொண்டகலும் என்கிறார். இப்படி யெங்கே கண்டோமென்ன - க்ருஷ்ணாஸ்ரயா꞉ இத்யாதி. "க்ருஷ்ணாஸ்ரயா꞉க்ருஷ்ணபலா꞉க்ருஷ்ணநாதாஸ்ச்சபாண்டவா꞉" இத்யாதி, மஹாபாரதே. த்ரோண - (கஅரு-உச) இதுசொன்னதுக்கு பாவம் - திர்யக்குக்களும் இத்யாதி. "ஆகத்தணைப்பாருக்கு" இத்யாதிக்கு அர்த்தம் - தன்னை இத்யாதி. விவரணம் - அநந்ய இத்யாதி. "உபௌதேவௌமுநி ஸார்தூல கிங்கரௌஸமுபஸ்த்திதௌ । ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை ஸாஸநம் கரவாவ கிம்" இதி பாலகாண்டே விஸ்வாமித்ரம்ப்ரதி ராம꞉. (நக-ச) 'செய்யில்' என்று தொடங்கி, 'ஐயன் - விரும்பித்தொழுவார்க்கெல்லாம் - மெய்யனாகும் - புறமேதொழுவார்க்கெல்லாம் - பொய்யனாகும் - ஆகத்தணைப்பார்கட்கணியனே' இத்யந்வய꞉ (எ)

போலே திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருந்த எம்பெருமானைப் பெறுகைக்கு அவன் திருவடிகளையே உபாயமாகப் பற்றுங்கோள்; இதுக்கொரு காலநியமமில்லை; வேண்டினபோது ஆஶ்ரயிக்கலாமென்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயியுங்கோள். உங்களுடைய து:க்கத்தையும் து:க்கஹேதுவான ஸம்ஸாரத்தையும் போக்கியருளுமென்கிறார்.

[மணிபொனேய்ந்த என்று மேலுக்கு] - ஶ்லாக்யமான மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரத்திலே திருநாட்டிற்படியே நின்றருளினவன் திருவடிகளைப் பணியுங்கோள்.

ப.— அநந்தரம், தன் திருவடிகளையே ப்ராப்யமென்றடைந்தார்க்கு அத்யந்த ஸுலபனாய்க்கொண்டு ஸம்ஸாரோச்சேதத்தைப் பண்ணுமென்கிறார்.

தனதாள் - நிரதிஶயபோக்யமான திருவடிகளை, அடைந்தார்க்குஎல்லாம்- கிட்டினார்க்கு, அணியன் ஆகும்-(தான்) அத்யந்த ஆஸந்நனாய்க்கொண்டு ஸுஜிபாநிற்கும்; (அத்தாலே), பிணியும் - ப்ராரப்தஜநகாந்தரரூபமான வ்யாதிபானவை, சாரா - கழியாநிற்கும்; பிறவி - (அதுக்குஹேதுவான) ஜந்மஸம்ஸர்க்கம், கெடுத்து - பிறவாதபடி கழித்து, ஆளும் - அடிமைகொள்ளாநிற்கும்; (ஆகலால்), மணி - மணியும், பொன் - பொன்னும், ஏய்ந்த - சேர்ந்த, மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த, திருக்கண்ணபுரம் - திருக்கண்ணபுரத்திலே, பரமேட்டிதன்பாதம் - பரமபதத்திலேயிருக்குமாபோலே ஸந்நிஹிதனானவன் திருவடிகளை, நாளும் - நிரந்தரமாக, பணிமின் - வணங்கி அநுபவிக்கும்படி பாருங்கோள். கணபுரமென்று - ஏழாம்வேற்றுமை தொக்கிக்கிடக்கிறது.

இ—எட்டாம்பாட்டில், அவனை ஆஶ்ரயியுங்கோள். உங்களுடைய து:க்கத்தையும் து:க்கஹேதுவான ஸம்ஸாரத்தையும் போக்கியருளும் என்கிறார்.

[அணியனாகும் இத்யாதி] - தன்திருவடிகளை ஆஶ்ரயித்தார்பக்கல் வரையாதே ஸுலபனும். இன்று ஆஶ்ரயித்ததொரு திர்யக்கைக்குறித்து, "கிம்கார்யம் ஸீதயா" என்றானிறே. [பிணியும் சாரா] - உங்களுடைய ஸகலது:க்கங்களும்போம். [பிறவிகெடுத்தாளும்] - அந்த து:க்கஹேதுவான ஜந்மக்கைப்போக்கி அடிமைகொள்ளும். [மணிபொன் இத்யாதி] - மணியாலும் பொன்னாலும் செய்த மதிள்சூழ்ந்த திருக்கண்ணபுரத்தில் என்று ஸப்தமியாவது. [பரமேட்டிதன் பாதமேநாளும் பணிமின்] — பரமபதத்திலிருக்கும்படியில் ஒன்றும் குறையாதபடியாய்த்து இங்கிருப்பது; அவன் திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைப் பண்ணுங்கோள்; அங்கு நித்யஸூரிகள் பணியவிருக்குமவன், இங்கேவந்தபின்பு நீங்களும் அவன்திருவடிகளிலே பணியப்பாருங்கோள்.

ஈடு.—எட்டாம்பாட்டு. 'அவனை யாஶ்ரயியுங்கோள்; உங்களுடைய து:க்கத்தையும் து:க்கஹேதுவான ஸம்ஸாரத்தையும் போக்கியருளும் என்கிறார்.

[அணியனாகும் தானதாளடைந்தார்க்கெல்லாம்] - தன்திருவடிகளை யாஶ்ரயித்தாரை வரையாதே அவர்களுக்கு ஸுலபனும். இன்று ஆஶ்ரயித்ததொரு திர்யக்கைக்

எட்டாம்பாட்டு.—அணியன் இத்யாதி. "பரமேட்டிதன்பாதம் - பணிமின் - பிணியும் சாரா; பிறவிகெடுத்தாளும்" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - அவனை இத்யாதி. "பிறவி" என்றத்தைப்பற்ற - ஸம்ஸாரத்தையும் என்றது.

"அடைந்தார்க்கெல்லாம்" என்றத்தைப்பற்ற - வரையாதே என்றது. அப்படி ஸுலபனேயென்ன-இன்றாஶ்ரயித்தது இத்யாதி. "ஆயிகிஞ்சித்ஸ்ரவணேநகிம்கார்யம் ஸீதயா".

குறித்து "கிம்கார்யம்ஸீதயாமம"(கிம்கார்யம்ஸீதயாமம) என்றாரிறே. [பிணியும் சாரா]- உங்களுடைய ஸகலதுঃகங்களும்போம். [பிறவிகெடுத்தாளும்] - அந்த துঃகஹேதுவான ஜந்மத்தைப் போக்கி அடிமைகொள்ளும். [மணிபொனேய்ந்த மதிள்சூழ் திருக்கண்ணபுரம்]- மணியாலும் பொன்னாலும் செய்த மதிளாலே சூழப்பட்ட திருக்கண்ணபுரத்திலே யென்று ஸப்தமியாக்கிக்கொள்ளுவது. [பரமேட்டி தன்பாதமே - பணிமின்நாளும்] - பரமபதத்தி லிருக்கும்படியி லொன்றும் குறையாதபடியாய்த்து இங்கிருப்பது. அவன் திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைப் பண்ணுங்கோள். அங்கு நித்யஸூரிகள் பணியவிருக்கு மவன் இங்கே வந்தபின்பு, நீங்களும் அவன்திருவடிகளிலே பணியப்பாருங்கோள். (௭)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

பாதம்நாளும் பணியத்தணியும்பிணி
ஏதம்சாரா எனக்கேல்இனியென்குறை?
வேதநாவர்விரும்பும் திருக்கண்ணபுரத்து
ஆதியானைஅடைந்தார்க்குஅல்லலில்லையே.

ஆ.—(பாதம்நாளும்.) - இப்படி அவன் திருவடிகளையாஶ்ரயிக்கவே, ஆகவ ஊநதுঃகவிரோதியான உத்தர பூர்வாகங்களெல்லாம்போம், இதிலொரு ஸம்ஶயமில்லை யென்றுசொல்லி, 'அவன்திருவடிகளையே ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் பற்றப்பெற் றேன் ; எனக்கினி என்னகுறையுண்டு?' என்றுகொண்டு ஸ்வலாபத்தைச் சொல்லுகிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், உபதேஶநிரபேக்ஷமாக நான் முன்னம் எம்பெரு மானை யாஶ்ரயித்து ஸுகியாகப்பெற்றேனென்று ப்ரீதராகிறார்.

[பாதநாளுமென்றுதொடங்கி மேலுக்கு]-நாள்தோறும் அவனை ஆஶ்ரயித்து வரப் பண்டுபண்ணின பாபங்கள் நசிக்கும். பண்ணினபாபம் ஶேஷியாது. எனக்கென்ன ஒருகுறை இல்லை. [வேதநாவரென்று மேலுக்கு] - வேதார்யவித்துக்கள் விரும்பும் திருக்கண்ணபுரத்திலே ஸந்நிஹிதனான ஸர்வேஶ்வரனை அடைந்தார்க்கு துঃகங்க ளில்லையே ; இது நிஶ்சிதம்.

ப.—அநந்தரம், நான் அவனை ப்ராபித்து என் ஸகலதுঃகங்களும் தீரப் பெற்றேன் ; காரணபூதனானவனைக் கிட்டினார்க்கு துঃகமுண்டோ? என்கிறார்.

பாதம் - அவன்திருவடிகளை, நாளும் - நாடோறும், பணிய - அநுபவிக்க, பிணி - முன்புண்டான துঃகங்களெல்லாம், தணியும் - போம் ; ஏதம் - மேலுமொரு

---

ஹரதநஹராவாஹராக்ஷணநயவீயவா" இதி யுத்தகாண்டே ஸுக்ரீவம் ப்ரதிராமঃ. (௪௧-4,5) ஏய்ந்த-செய்த. "திருக்கண்ணபுரத்தில்-பரமேட்டி" என்று விசேஷித்ததுக்கு பாவம்- பரமபதத்தில் இத்யாதி. அவன் திருவடிகளிலே பணியவேண்டுவானென்னென்ன - அங்கு நித்ய ஸூரிகள் இத்யாதி ; அன்றிக்கே, 'பரமபதத்தில்' இத்யாதிவாக்யத்தில், "திருக்கண்ணபுரத்திலே யிருக்கிறவன்பரமேட்டி" என்று அர்த்தம்அருளிச்செய்தாராய்,பரமபதஸ்த்தன்கிடீர் இங்கு வந்திருக் கிறான் என்றர்த்தாந்தரமாதல். 'மணிபொனேய்ந்த' என்று தொடங்கி, 'திருக்கண்ணபுரத்தில்- பரமேட்டிதன்பாதம் - பணிமின் ; தனதாளடைந்தார்க்கெல்லாம் - அணியனாகும்; நாளும் - பிணி யும்சாரா; பிறவிகெடுத்தாளும்' இத்யந்வயঃ. பரமே ஸ்த்தாநே ஸ்த்தித இதி பரமேஷ்டீ. (௮)

துக்கங்களும், சாரா - வாராதுகள்; இனி - ஆகலால், எனக்கு என் குறை - எனக்கு என்னகுறையுண்டு? வேதநாவர் - வேதோச்சாரணத்தை நாக்குக்கு நிரூபகமாகவுடையவர்கள், விரும்பும் - ("வெதவெதெ" என்று வர்த்திக்கையாலே) விரும்பும்படியான, திருக்கண்ணபுரத்து - திருக்கண்ணபுரத்திலே, ஆதியானை - வேதைகஸமதிகம்யனை பரமகாரணபூதனை, அடைந்தார்க்கு - ப்ராபித்தார்க்கு, அல்லல்-துக்கம், இல்லையே - இல்லையாகாதே. "பிணி, ஏதம்" என்று - பூர்வாநேகாத்தராகங்களுமாகவுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், உபதேசநிரபேக்ஷமாக நான் முன்னம் அவனை ஆஶ்ரயித்து ஸுகியாகப்பெற்றேனென்று ப்ரீதராகிறார்.

[பாதமித்யாதி] - அவன்திருவடிகளை ஆஶ்ரயிக்கவே அநாதிகாலார்ஜிதமான பூர்வாவம் நஶிக்கும். இனியத்தைச்செய்யவே விரோதியான பாபம்போமென்கை. [ஏதம் சாரா] - உத்தராவமானது ஶ்லேஷியாது. அவன்திருவடிகளிலே தலைசாய்க்க என்னுடைய ஸகல துரிதங்களும் போவதானபின்பு எனக்கொருகுறையுண்டோ? வேதார்த்தவித்துக்கள்விரும்பும் திருக்கண்ணபுரத்திலே ஸந்நிஹிதனை ஜகத்காரணபூதனை. 'வேதநாவர்' என்கிறது, திருமங்கையாழ்வாரைப்போலவாரை. 'விரும்புகை' யாவது - "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேனொருவர்க்குரியேனோ" என்கை. ப்ரமாணம் வேதமாய், ப்ரமேயம் ஜகத்காரணமாயிறேயிருப்பது. "காரணந்து த்யேயः" என்று ஜகத்காரணவஸ்துவிறே த்யேயம். 'ஆதியானை அடைந்தார்க்கல்லலில்லையே' - தாய்மடியிலே சாய்ந்தார்க்கு க்லேஶமில்லையென்னுமிடம் ஸுஸித்தம்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. உபதேஶநிரபேக்ஷமாக நான் முன்னம் அவனை யாஶ்ரயித்து ஸுகியாகப் பெற்றேனென்று ப்ரீதராகிறார்.

[பாதநாளும்பணியத்தணியும்பிணி] - அவன் திருவடிகளை யாஶ்ரயிக்கவே; அநாதிகாலார்ஜிதமான பூர்வாவம் நஶிக்கும். இனியதுசெய்ய, விரோதியானபாபம்போமென்கை. [ஏதஞ் சாரா] - உத்தராவமானது ஶ்லேஷியாது. [எனக்கேல்இனியென்குறை] - அவன்திருவடிகளிலே தலைசாய்க்க என் ஸகலதுரிதங்களும் போவதானபின்பு, எனக்கு ஒருகுறையுண்டோ? [வேதநாவர் இத்யாதி] - வேதார்த்த வித்துக்கள் விரும்பி வர்த்திக்கிற திருக்கண்ணபுரத்திலே ஸந்நிஹிதனை ஜகத்காரணபூதனை. 'வேதநாவர்'என்கிறது-

---

ஒன்பதாம்பாட்டு.—பாதம் இத்யாதி. "எனக்கேலினியென்குறை" என்றத்தைப்பற்ற அவதாரிகை - உபதேஶ இத்யாதி.

"பாதம் - பணிய - நாளும் - பிணி - தணியும்" என்றந்வயித்தர்த்தம் - அவன்திருவடிகளை இத்யாதி. "நாளும் பிணி" என்று - பூர்வாவம். நாடோறுமுண்டான - அநாதிகாலார்ஜிதமான பிணியென்றபடி. பூர்வாவநாஶத்துக்கு ஆஶ்ரயணம் ஸாதநமோவென்ன-இனியது இத்யாதி. இனியது - போகரூபம். இனியதுசெய்ய - இனியத்தைச்செய்யவென்றபடி. "நாளும் - பிணி - தணியும்-ஏதம்சாரா"என்றதுக்கு "தத்அதிகம உத்தரபூர்வாகயோரஶ்லேஷவிநாஶௌ தத்வ்யபதேஶாத்"(ஶா-ஶ்ரீ-சுயி-கஉ.௦.ஸூ-சஅஉ.) என்கிற ஸூத்ரார்த்தமென்றருளிச்செய்வர். எனக்கேல் - எனக்கென்றபடி. ஏல் - அவ்யயம். வேதத்தை நாவிலேயுடையவரென்று ஸப்தார்த்தமாய், வேதார்த்தவித்துக்களை லக்ஷிக்கிறது. வேதார்த்தவித்துக்களாவாராரென்ன- வேதநாவரென்கிறது இத்யாதி. திருமொழி எட்டாம்பத்து ஒன்பதாந்திருமொழி மூன்றாம்பாட்டு, "விடையேழன்றடர்த்து" இத்யாதி. 'கண்ணபுரமொன்றுடையான்' இத்யாதிக்கு - ஸ்பஷ்டோர்த்த: "வேதநாவர், ஆதியானை" என்ற பதச்சேர்த்திக்கு பலிதம் - ப்ரமாணம் இத்யாதி. இங்கே

திருமங்கையாழ்வார்போல்வாரை. விரும்புகையாவது - "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேனொருவர்க்கு உரியேனே" என்கை. ப்ரமாணம் வேதமாய், ப்ரமேயம் ஜகத்காரணமாயிறே யிருப்பது. "காரணம்து த்யேயః" (காரணம்துத்யேயః) என்று ஜகத்காரண வஸ்துவிறே த்யேயம். [ஆதியானையடைந்தார்க்கல்லல் இல்லையே] - தாய்மடியிலே சாய்ந்தார்க்கு க்லேசமில்லையென்னுமிடம் நிஸ்சிதம். (கூ)

---

## பத்தாம் பாட்டு.

இல்லையல்லல் எனக்கேல்இனியென்குறை?
அல்லிமாதரமரும் திருமார்பினன்
கல்லிலேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
சொல்ல நாளும்துயர் பாடுசாராவே.

ஆ.—(இல்லையல்லல்) - அவன்திருவடிகளை யாஸ்ரயித்து 'நிரஸ்தாகிலதுःவனானேன்; எனக்கு இனியென்னகுறையுண்டு?' என்று, ப்ரீத்யதிஸயத்தாலே பின்னையும் தம்முடைய லாபத்தைச்சொல்லி, "அவனேரக்ஷகன்" என்று விஸ்வஸிக்கமாட்டீராகில் திருக்கண்ணபுரமென்று சொல்லுங்கோள்; சொல்லவே, ஒருநாளும் துःவங்கள் வாராவென்கிறார்.

ஓ.—பத்தாம்பாட்டில், ப்ரீத்யதிஸயத்தாலே மீளவும் ஸ்வலாபத்தைச் சொல்லி பக்தி ப்ரபத்த்யநுஷ்டாநங்களுக்கு க்ஷமரல்லராகில், திருக்கண்ணபுரமென்று வாயாலேசொல்ல ஸமஸ்த துःவங்களும் போமென்கிறார்.

[அல்லிமாதரமரும் திருவென்றுமேலுக்கு] - ஆஸ்ரயிப்பாருடைய ஆஸ்ரயணத்தில் குறைவுபாராதே அவர்களைத்தானே விஷயீகரிக்கும்படிபண்ணும் ஸ்வபாவையான பெரியபிராட்டியார் நிரந்தரவாஸம்பண்ணும் திருமார்வை உடையவனுடைய ஸ்தாநமான திருக்கண்ணபுரத்தை.

ப.—அநந்தரம், ஸ்ரிய:பதியான ஸர்வேஸ்வரனுடைய திருக்கண்ணபுரத்தைச் சொன்னவளவிலே துःவங்கள் வாராதடியாயிருந்தது; எனக்கினி யென்னகுறையுண்டென்கிறார்.

அல்லி - தாமரைப்பூவை யிருப்பிடமாகவுடையளாய், மாதர் - * நாரீணாமுத்தமையான லக்ஷ்மி, அமரும் - நித்யவாஸம்பண்ணுகிற, திருமார்பினன் - திருமார்வையுடையவனதாய், கல்லிலேய்ந்த - கல்லாலேசெறிந்த, மதிள்சூழ் - மதிள்சூழ்ந்த, திருக்கண்ணபுரம் - திருக்கண்ணபுரத்தை, சொல்ல - சொன்னவளவிலே, நாளும் - ஸர்வகாலமும், துயர் - துக்கங்கள், பாடு - அருகு, சாரா - வாராதனவாயிருந்தன. (ஆனபின்பு), எனக்கு-, அல்லல் - அநுபவாலாப துःவம், இல்லை - உண்டாகாதாயிருந்தது; இனி - இப்படியானபின்பு, என்குறை-என்னகுறையுண்டு? அநுபவம்அவிச்சிந்நமன்றோவென்று கருத்து.

---

காரணத்வம் சொல்லுவானென்னென்ன காரணந்து இத்யாதி. "காரணபூதனை யடைந்தார்க்கல்லலில்லை" என்கிற பதப்ரயோகத்துக்கு பாவமாதல், "இல்லையே" என்றவவதாரணார்த்தமாதல். தாய்மடியிலே இத்யாதி. 'பாதம் பணிய - நாளுமுண்டான - பிணி - தணியும்: ஏதம் சாரா:இனி-எனக்கேல் - என்குறை?' ஆகையாலே, 'வேதநாவர்' தொடங்கி, 'அல்லலில்லை' இத்யந்வய:. (கூ)

இ.—பத்தாம்பாட்டில், ப்ரீத்யதிஶயத்தாலே ஸ்வலாஶத்தைச்சொல்லி ஶக்திப்ரபத்த்யநுஷ்டாநங்களுக்கு க்ஷமரல்லாதார்க்குத் திருக்கண்ணபுரமென்கிற உக்தியாலே ஸமஸ்ததுஃகங்களும் போமென்கிறார்.

[இல்லையல்லல்] - ஸகலதுஃகங்களும் போம். இனி எனக்கு என்னகுறையுண்டு? ஶகவதநுஶவவிரோதி துரிதங்கள் போனபின்பு, எனக்குஅநுஶவிக்கைக்குஒரு தேஶவிஶேஷம் தேடிப்போகவேண்டியிருந்ததோ? என்னால் வருவது போவதான பின்பு, அவனால் வருவதுக்குஒருகுறையுண்டோ? [அல்லிமாதரிதயாதி] - பெரிய பிராட்டியார் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வை யுடையவன். ஆஶ்ரயணத்தில் குறைவுபார்த்து அவன் அநாதரியாதபடி "நகஶ்சிந்நாபராத்யதி" என்பாரும்அருகே யுண்டு. திண்ணிதானமதிளையுடைய திருக்கண்ணபுரத்தை வாயாலேசொல்ல. ஶக்தியிலே யிழிகைக்கு பரிகாரமின்றிக்கே ப்ரபத்திக்கும் வ்யவஸாயமில்லாதார் "திருக்கண்ணபுரம்" என்று வாயாலேசொல்லவே ஸமஸ்ததுஃகங்களும் போம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. ப்ரீத்யதிஶயத்தாலே ஸ்வலாஶத்தைச்சொல்லி, ஶக்தி ப்ரபத்த்யநுஷ்ட்டாநங்களுக்கு க்ஷமரல்லாதார் திருக்கண்ணபுரமென்கிற உக்தியைச் சொல்லவே ஸமஸ்ததுஃகங்களும் போமென்கிறார்.

[இல்லையல்லல்] - ஸகலதுஃகங்களும்போம். [எனக்கேல் இனியென்குறை]- இனியெனக்கென்ன குறையுண்டு? ஶகவதநுஶவவிரோதியான துரிதங்களும்போனபின்பு, எனக்குஅநுஶவத்துக்குஒருதேஶவிசேஷம் தேடிப் போகவேண்டியிருந்ததோ? [அல்லியித்யாதி] - பெரியபிராட்டியார் நித்யவாஸம்பண்ணுகிற திருமார்வையுடையவன். ஆஶ்ரயணத்திற்குறைபார்த்து அவன்அநாதரியாதபடி "நகஶ்சிந்நாபராத்யதி" (நகஶ்சிந்நாபராத்யதி) என்பாரும்அருகேயுண்டு. திண்ணிதான மதிளையுடைய திருக்கண்ணபுரத்தை வாயாலேசொல்ல. ஶக்தியிலிழிகைக்குப்பரிகாரமின்றியே ப்ரபத்திக்கு வ்யவஸாயமின்றிக்கேயிருக்குமவர்கள், "திருக்கண்ணபுரம்" என்று வாயாலேசொல்லவே, ஸமஸ்ததுஃகங்களும் போம்.

(க0)

---

# பதினோராம் பாட்டு.

---

பாடுசாராவினை பற்றறவேண்டுவீர்!
மாடநீடு குருகூர்ச்சடகோபன் சொல்
பாடலானதமிழ் ஆயிரத்துள்இப்பத்தும்
பாடியாடிப்பணிமின் அவன்†தாள்களே.

---

பத்தாம்பாட்டு.—இல்லையல்லல் இத்யாதி. "எனக்கேலினியென்குறை - திருக்கண்ணபுரஞ்சொல்ல நாளும்துயர்பாடுசாரா" என்றவற்றைக்கடாக்ஷித்து அவதாரிகை-ப்ரீத்யதிஶயத்தாலே இத்யாதி.

"இனி" என்றதுக்கு ஶாவம் ஶகவதநுஶவ இத்யாதி. இப்போதுஇது சொன்னதுக்கு ஶாவம் - ஆஶ்ரயணத்தில் இத்யாதி. "கல்லிலேய்ந்த" என்கையாலே - திண்ணிதானமதிள் என்றது. "சொல்ல" என்றதுக்கு ஃபலிதம்-ஶக்தியில் இத்யாதி. நாளும்துயர் - நாள்தோறுமுண்டான துயர். பாடுசாரா - அருகில் கிட்டாது. அடைவே அந்வயம். (க0)

---

† 'தாள்களையே' என்றும் பாடம்.

ஆ.—(பாடுசாரா.) - ஸ்வரூபமான உபாயத்தாலே நிரஸ்த ஸமஸ்த ப்ரதிபந்தகராய்க்கொண்டு எம்பெருமானைப் பெறவேண்டுவீர்! திருவாய்மொழியைப்பாடுங்கோள் என்கிறார்.

ஒ.—நிகமத்தில், ப்ரதிபந்தகங்களெல்லாம் பாடுசாராது பற்றறவேண்டியிருக்கும் நீங்கள் இத்திருவாய்மொழியை ப்ரீதிபூர்வகமாகச் சொல்லிக்கொண்டு அவனை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

ப —அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு ஃலமாக ஃமவதநுஃவத்தை யருளிச்செய்கிறார்.

வினை - ஸாம்ஸாரிக ஸகலதுஃகங்களும், பாடுசாரா - உங்கள் பரிஸரத்திலேயன்றியே, பற்றறவேண்டுவீர்-ஸவாஸநமாகப் போகவேண்டியிருந்திகோளாகில்,மாடம்-மாடங்கள், நீடு - உயர்ந்த, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல் - அருளிச்செய்ததாய், பாடலான - கானரூபமான, தமிழ் - த்ராமிடமாயிருக்கிற, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக்குள்ளே, இப்பத்தும் - இப்பத்தையும், பாடி - ப்ரீதியுக்தராய்க்கொண்டுபாடி, ஆடி - ஹர்ஷத்தாலே ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணி, அவன்தாள்கள் - அந்தஸௌலப்யனை ஸர்வேஶ்வரன் திருவடிகளை, பணிமின் - வணங்கி அநுஃவிக்கும்படி பாருங்கோள். இத்திருவாய்மொழி முகத்தாலே, ஃமவதநுஃவம்பண்ணவே ஸமஸ்த துரிதமும் ஸவாஸநமாகப்போமென்று கருத்து. இது-கலிவிருத்தம்.

இ.—நிமகத்தில், ப்ரதிபந்தகங்கள் ஸவாஸநமாகப் போகவேண்டியிருக்கில்,இத்திருவாய்மொழியை ப்ரீதிபூர்வகமாகச் சொல்லிக்கொண்டு அவன்திருவடிகளை ஆஶ்ரயியுங்கோள் என்கிறார்.

[பாடுசாரா இத்யாதி] - வினையானது உங்கள் பார்ஶ்வத்தில் வந்து கிட்டாதபடி வாஸனையோடே போகவேண்டி யிருந்திகோளாகில் நித்யமான மாடங்களையுடைத்தான திருநகரியையுடைய ஆழ்வார் அருளிச்செய்த. ஆப்தோபதேஶமாகையாலே திருவாய்மொழியில் பிறந்தவற்றில் அர்த்தவாதமில்லை. [பாடலித்யாதி] - அநாப்தர்சொல்லிலும் விடவொண்ணாத ஃமாஃயதையையுடைத்தானஇப்பத்து.புஷ்பம் பரிமளத்தோடே அலருமாபோலே இசையோடேகூடப் பாடின தமிழ், ப்ரீதிபூர்வகமாகப்பாடி, இருந்தவிடத்திலிருக்க வொட்டாதே ஆடி ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு அவன் திருவடிகளிலே விழுங்கோள்; இதன்றோ நான் உங்களைக் குடிக்கச்சொல்லுகிற வேப்பங்குடிநீர் ?

ஈடு.—நிமகத்தில், ப்ரதிபந்தகங்கள் ஸவாஸநமாகப் போகவேண்டியிருக்கில், இத்திருவாய்மொழியை ப்ரீதிபூர்வகமாகச் சொல்லிக்கொண்டு அவன்திருவடிகளை யாஶ்ரயியுங்கோ ளென்கிறார்.

---

நிகமம் - பாடுசாரா இத்யாதி. "பாடுசாராவினை பற்றறவேண்டுவீர் - இப்பத்தும் பாடியாடி - அவன்தாள்கள் - பணிமின்" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை - பிரதிபந்தகங்கள் இத்யாதி.

[பாடுசாராவினைபற்றறவேண்டுவீர்] - வினை உங்கள் பார்ஶ்வத்திலே வந்து கிட்டாதபடி ஸவாஸநமாகப் போகவேண்டியிருந்திகோளாகில். [மாடநீடு இத்யாதி] - நித்யமான மாடங்களையுடைத்தான திருநகரியையுடைத்தான ஆழ்வாரருளிச்செய்த. ஆப்தோபதேஶமாகையாலே, திருவாய்மொழியிற் பிறந்தவற்றி லர்த்தவாதமில்லை. [பாடல் இத்யாதி] - அநாப்தர்சொல்லிலும் விடவொண்ணாத போக்யதையையுடைத்தானஇப்பத்து. புஷ்பம் பரிமளத்தோடே யலருமாபோலே, இசையோடேகூடப் பாடின தமிழ். [பாடியாடிப்பணிமின்அவன்தாள்களே]-ப்ரீதிபூர்வகமாகப்பாடி இருந்தவிடத்திலிராதே யாடி ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு அவன்திருவடிகளிலே விழுங்கோள். இதன்றோ நான் உங்களைக் குடிக்கச்சொல்லுகிற வேப்பங்குடிநீர்! *தேனேமலரும் திருப்பாதத்தையிறே சேரச்சொல்லுகிறது.

---

"வினை - பாடுசாரா" என்றந்வயிப்பது. "நீடு - மாடம்-" நித்யமானமாடமென்றபடி. நீட்சி - காலக்ருததைர்க்யபரம். இங்கே "சடகோபன்' என்று தம்மைச்சொன்னதுக்கு பாவம் - ஆப்த இத்யாதி. "பாடலான" என்று கானரூபமென்கிற போக்யதாகதநத்துக்கு பாவம்-அநாப்தர் இத்யாதி. ஶப்தார்த்தம் - புஷ்பம் இத்யாதி. வ்யங்க்யமாக பாவம் - இதன்றோ இத்யாதி. விவரணம் - தேனேமலரும் இத்யாதி. 'வினை - பாடுசாராவித்யாப்ய, பத்தும் பாடியாடி - அவன்தாள்களை - பணிமின்' இத்யந்வய:. (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— [illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

மாலுமது வாஞ்சைமுற்றும் மன்னுமுடம் பின்முடிவில்
சாலநண்ணிச் செய்வனெனத் தானுகந்து - மேலவனைச்
சீரார் கணபுரத்தே சேருமெனும் சீர்மாறன்
தாரானோ நந்தமக்குத் தாள்.

---

ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானார் திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.



## [illegible] - ஆம் பத்து—பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 14 | 29 | பிறதவனுடைய | பிறந்தவனுடைய |
| ,, | 37 | ஸவெகஜ்ஞ | ஸவெஜ்ஞ |
| 48 | 7 | குடிங்கிடந்தானே | குடிக்கிடந்தானே |
| 49 | 4 | மங்கைகயையும் | மங்கையும் |
| 71 | 8 | ஸாஹஜ்ஞ | ஸாலஹஜ்ஞ |
| ,, | 9 | நிந்தரமாக | நிரந்தரமாக |
| 72 | 6 | கடைல் | கடல் |
| 74 | 31 | க்ஷமரமன்றிக்கே | க்ஷமரன்றிக்கே |
| 80 | 12 | காரொன்றே | காரொன்றே |
| 83 | 15 | யாஶ்ரயிருப் | யாஶ்ரயிப் |
| 91 | 39 | விராதி | விரோதி |
| 117 | 9 | பண்ணுகைக்காக | பண்ணுகைக்காக |
| 120 | 24 | வாக்யத்வயத் | வாக்யத் |
| 121 | 29 | தலைமகனை | தலைமகளை |
| 125 | 15 | அவிசால்யானாய் | அவிசால்யனாய் |
| 130 | 15 | திருவாய்மொழிலும் | திருவாய்மொழியிலும் |
| 138 | 21 | நுஞ்சேவலும் | நுஞ்சேவலும் |
| ,, | 22 | மெய்யல்லவொரு | மெய்யனல்லவொரு |
| 143 | 29 | ஈடும்படியான | ஈடுபடும்படியான |
| 157 | 15 | வென்கைச்செய்தே | வென்னச்செய்தே |
| 159 | 30 | குத் | குத்தி |
| 163 | 11 | என்றிருக்குறே | என்றிருக்குமிறே |
| 167 | 31 | ஹாஜ்ஞடநா | ஹாஜ்ஞாடநா |
| ,, | 32 | ஸம்ரூஶிதீ | ஸம்ரூஶிநீ |
| 171 | 38 | அநிவேஶத்தை | அஹிநிவேஶத்தை |
| 175 | 15 | ப்ரமேதத்தாலே | ப்ரேமத்தாலே |
| 213 | 7 | செல்லுங்கோள் | சொல்லுங்கோள் |
| ,, | 24 | அவாஶாஃ | அவஶாஃ |
| 217 | 30 | வாக்யார்த்த்தோடு | வாக்யார்த்தத்தோடு |
| 218 | 20 | ஸாஃவஞநள | ஸாவஞநள |
| 219 | 21 | கிஷ்கிந்தாண்டத்திலே | கிஷ்கிந்தாகாண்டத்திலே |
| ,, | 24 | ஸுவஸஸாரு | ஸுவஸம்ஸாரு |
| 222 | 19 | கனக்கோள் | கனக்கொள் |
| 229 | 36 | கருத்தென்னென் | கருத்தென் |
| 232 | 16 | கடாக்ஷித்தவத | கடாக்ஷித்தவதா |
| 236 | 35 | வாத்ய | வாக்ய |
| 238 | 4 | சேலை | சோலை |
| ,, | 35 | மென்றது | என்றது |
| 262 | 23 | மித்தனையிமிறே | மித்தனையுமிறே |
| 273 | 19 | பூப்லோலே | பூப்போலே |
| 274 | 21 | ஆஶ்ரயித்தவ | ஆஶ்ரயத்தளவ |
| 278 | 25 | வைதக | வைாதக |
| 281 | 26 | ஷ்ரீத்வ | ஸ்த்ரீத்வ |
| 290 | 8 | கங்களை | தங்களை |
| ,, | 21 | எவைஷவாஶம் | எவைஷவாஶம் |
| 296 | 4 | தௌர்த்யதில் | தௌர்த்யத்தில் |

நோபில் பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை.

ஸ்ரீ

# பகவத் விஷயம்

## பத்தாம் பத்து

## திருவாய்மொழி மூலமும்

ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி,
இருபத்தினாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யானங்களும்,
சீயர் அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு, த்ரவிடோபநிஷத்ஸங்கதி,
த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி, திருவாய்மொழி
நூற்றந்தாதி இவைகளுடன்.

சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு

வை. மு. கோபாலகிருஷ்ணமாசார்யராலும்,
ஆ. வி. நரஸிம்மா சார்யராலும்
பரிசோதிக்கப்பெற்றது.

திருவல்லிக்கேணி,
நோபில் அச்சுக்கூடம்.

சுக்கில௵] [1930.

ஸ்ரீ:

# திருவாய்மொழி.

## பத்தாம்பத்து.

### முதல் திருவாய்மொழி—தாளதாமரை - ப்ரவேஶங்கள்.

#### ஆறாயிரப்படி.

(தாளதாமரை.) - திருக்கண்ணபுரத்தில் எம்பெருமானை அநுபவித்து, இப்போது திருமோகூரில் எம்பெருமானை யநுபவிக்கிறார்.

#### ஒன்பதினாயிரப்படி.

பத்தாம்பத்தில் முதல் திருவாய்மொழியில், ஶரீராவஸாந ஸமநந்தரத்தில் எம்பெருமானைப் பெறக்கடவதான நிர்ணயம்பெற்ற ஆழ்வார், தானாக அபிமானித்துப் போந்த ஶரீரத்தையும் முகம்பழகின மனிசரையும் இழந்து, முகமறிவாரொருத்தரையும் காணாதே, செல்லக்கடவ இடமெல்லாம் கண்டறியாத நிலமாயிருக்கும்படியையும், போகக்கடவ வழியின் நெடுமையையும், போகைக்கு விரோதமான ஸம்ஸார துரிதத்தையும் அநுஸந்தித்து,- "இவ்விரோதங்கள் தட்டாமே இந்நெடுந்தூரம் துர்ப்பலரான நம்மால் போய்முடிக்கை அரிது; பந்துவுமாய், ஆப்தனுமாய், ஆந்ருஶம்ஸ்யத்தை யுடையனுமாய், ப்ரபல விரோதிகளுண்டாகிலும் அவற்றைப் போக்கிக்கொண்டுபோக வல்லனுமா யிருப்பானொருதுணை, ஶரீரவியோக காலத்திலே அவஶ்யம் வேணும்" என்று அத்யவஸித்து,- சொன்ன குணங்களையெல்லாம் உடையனாய், ஶ்ரமஹரமான வடிவையுமுடையனாய், ஸர்வருடைய ரக்ஷணத்திலும் தீக்ஷிதனாயிருக்கிற காளமேகத்தைத் திருமோகூரிலே கண்டு, அவன்பக்கலிலே தம்மை நிக்ஷேபித்து, அவனை இத்தசைக்குத் துணையாகப் பற்றுகிறார்.

#### பன்னீராயிரப்படி.

பத்தாம்பத்தில், கீழ்ப்பத்திலே, ஸர்வேஶ்வரனுடைய பலரூபத்வத்தை நிரூபித்தருளி ததநுபவரூபமான பலத்தினுடைய அவாப்தி ப்ரகாரத்தை இப்பத்திலே நிரூபித்தருளுவதாகக்கொண்டு, ஆப்தனான அவனுடைய கதிஸாஹாய்யத்தையும், முன்புண்டான தூராத்வ க்லேஶ ஶாந்தியைப்பண்ணும் ஹோகயநாமாதி யோகத்தையும், ஸம்ஶ்லிஷ்டனா யிருக்கச்செய்தே விஶ்லேஷ ஶங்கைபண்ணி க்லேஶிக்கும்படியான ஸாரஸ்யாதிஶயத்தையும், அநந்யஸாத்யநரோபாதி உபாஸகர்களுக்கும் ப்ராப்யனுமா காரத்தையும், ஸப்ரகாரோபாஸகபரர்க்கும் அநிஷ்டநிவ்ருத்தி இஷ்டப்ராப்திகளுக்குத் தானே நிர்வாஹகனென்னுமிடத்தையும், ததீயஶேஷத்வபர்யந்தமாகத் தன்னை ஆஶ்ரயித்தாருடைய சித்தாநுவிதாநம்பண்ணிக்கொண்டு பலப்ரதாநத்திலே உத்யுக்தனாம் படியையும், தன்பக்கல் ப்ரவணரானாருடைய ஶரீராதிகளையும் தான் விரும்பாநின்றுகொண்டு அவர்கள் அபேக்ஷைக்காக அவற்றை விடுவிக்கும்படியையும், யாத்ருச்சிகமான

ஆநுகூல்யமே பற்றாசாகயாவத் தேஹப்ரக்ஷணைகையும், தேஹஸித்திக்கு உறுப்பான அர்ச்சிராதிமார்க்கத்தில் ஆதிவாஹிக ஸத்கார ப்ரகர்ஷத்தையும், அதிஶயிதையான பரபக்திரூபமான அபிநிவேஶத்தையுடைய தமக்கு ஸ்ரீய:பதியான தன்னோடு உண்டான ஸ்த்திரஸாயுஜ்ய ப்ரகாஶத்தைப் பண்ணினபடியையும் அபரோக்ஷித்து அத்யந்த ஹ்ருஷ்டராய், அவாப்தஸமஸ்தராய் முடித்தருளுகிறார்.

முதல் திருவாய்மொழியில், கீழ் ப்ரஸ்துதமான கைங்கர்யப்ரதிஸம்பந்தித்வம் ஒருதேஶவிஶேஷத்திலே பூர்ணமாயிருக்கையால், இத்தேசத்தில்நின்றும் அங்கேறப்போகைக்கு பாதகமான நம்முடைய விரோதியைக்கழித்து உகப்போடே வழி நடத்திக்கொண்டுபோவானொரு ஸஹாயபூதன் வேணும் என்றறுதியிட்டு, திருமோகூரிலே ஸந்நிஹிதனான ஸர்வேஶ்வரனுடைய நிர்பாதகஹேதுயமான வ்யூஹரூபத்தையையும், நித்யாநுபாவ்யத்வயுக்தமான நாமபூர்த்தியையும், நிகிலஜந்து ரக்ஷகத்வத்தையும், ரக்ஷணார்த்தமான அநந்தஶாயித்வத்தையும், அஶேஷஜநஸம்ஶ்லேஷத்தையும், அநுபவப்ரீதிகரமான ஆப்தத்வத்தையும், அகிலலோக ஸ்ரஷ்ட்ருத்வத்தையும், அவதார ப்ரயுக்தஶீல ஶீதலத்வத்தையும், அவயவவைலக்ஷண்யத்தையும், ஆஶ்ரிதரக்ஷணத்தில் அபீஷ்டவிக்ரஹ பரிக்ரஹத்தையும் அநுஸந்தித்து, ஏவம்விதனான ஸர்வேஶ்வரனே நமக்கு வழித்துணையாவான் என்று காளமேகத்தின் திருவடிகளையே தஞ்சமாகப்பற்றியருளுகிறார்.

## இருபத்துநாலாயிரப்படி.

பத்தாம்பத்தில் முதல் திருவாய்மொழியில், கீழே "நாளேலறியேன் எனக்குள்ளன" என்றார்; "மரணமானால்" என்று ஈஶ்வரன் நாளிட்டுக் கொடுத்தான். அவன் ஒன்றைச்சொன்னால் அது கைப்பட்டதென்று மேலே போகலாம்படியிறே இருப்பது; ஆகையாலே, காலாவதி பெற்றாராய்ப் போக்கிலே ஒருப்பட்டார்; போமிடத்து, முகம்பழகின ஶரீரத்தைவிட்டு நெடுநாள் வாஸனை பண்ணின பந்துக்களை விட்டுத் தான் தனியனாய்ப் போகிறவிடமும் முகமறியாதநிலமாய் நெடுங்கை நீட்டுமாயிருக்கிறபடியையும், போகைக்கு விக்நமாய்த் தான்சூழ்த்துக்கொண்ட அவித்யா கர்மவாஸநா ருசிகளான ஸம்ஸார துரிதத்தையும் அநுஸந்தித்து; "இவ்விக்நங்கள் தட்டாதபடி நெடுந்தூரத்தை துர்ப்பலரான நம்மால் போய்முடிக்கை யரிது: இனிப் போமிடத்து ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாயிருப்பானொருவன் வழித்துணையாக வேண்டியிருந்தது." "ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்" "பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே" என்று வழிகொடுபோக வீரகறியுமவனுமாய் ஶக்தனுமாய் "பதிம் விஶ்வஸ்ய" என்கிறபடியே ப்ராப்தனுமாய், "மாதா பிதா ப்ராதா" என்கிறபடியே ஸர்வவிதபந்துவுமாய், "மயர்வறமதிநலமருளினன்" என்கிறபடியே பரமதயாவானுமாய், ஶ்ரமஹரமான வடிவையுடையனுமாய், ஸர்வரக்ஷணத்திலும் தீக்ஷிதனுமாயிருக்கிற காளமேகத்தைத் திருமோகூரிலே கண்டு அவன்பக்கலிலே ஆத்ம ஸமர்ப்பணத்தைப் பண்ணி, வழித்துணையாகப் பற்றுகிறார். அவன் கொடுபோமிடத்தில் வடிவழகை அநுபவித்துக்கொண்டு பின்னே போகலாம்படியிறே இருப்பது. "[illegible]" என்றும் "உன்தமர்க்கென்றும் நமன்தமர் கள்ளர்போல்" என்றும் அத்தசையில் விரோதிகள் வீதரா யொளிக்கும்படியிறே இருப்பது.

ஈடு.

"நாளேலறியேனெனக்குள்ளன" என்றார்; "மரணமானல்" என்றறுதியிட்டுக் கொடுத்தான் ஈஶ்வரன். அவன் "செய்கிறோம்" என்று தலைதுலுக்கினல், அநுபெற்றதாய் மேல் நடக்கலாம்படியா யிருக்குமிறே கார்யம். ஆகையாலே, † (காலாவதிபெற்றாராய்) போக்கிலேயொருப்பட்டார்; போமிடத்தில், ஶகம்பழகின தேஹத்தையும்விட்டு நெடுநாள் வாஸனைபண்ணின பந்துக்களையும் விட்டுத் தனியேயாய்ப் போகிறவிடந்தான் கண்டறியாத நிலமாய், நெடுங்கைநீட்டாய், வழியிலே ப்ரதிபந்தகங்களும் துவாலாய்-அவித்யா கர்மவாஸநாருசிகள் என்றாற்போலே சொல்லுகிறவற்றுக்கும் ஓர் அவதியில்லையிறே; இவற்றையடையப்போக்கி வழித்துணையாய்க் கொண்டுபோம்போது ஸர்வேஶ்வரன் தன்னையே பற்றவேணும். அதுவென்? இவன்தானே தனக்குத் துணையாஞலோ வென்ருல்,—இன்றளவும் வர ஸம்ஸரிக்கைக்குக் காரியம்பார்த்துப் போந்தவனிறே இவன்; இஶ்ஶரீரத்தோடே யிருக்கிறநாளிலே ஹிதசிந்தை பண்ணிஞனேயாகிலும் இவனுடைய பூர்வவ்ருத்தத்தைப் பார்த்தால் இவன்தான் தனக்குத் துணையாகமாட்டானே. வழிகொடுபோமிடத்தில் இவர்க்கு வரும் † விரோதிகளை யறிகைக்கு ஸர்வஜ்ஞனுகவேணும்: அறிந்தால் அவற்றைப் போக்கிக் கொடுபோகைக்கு ஸர்வஶக்தியாகவேணும்: "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" (யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்) இத்யாதி ப்ரமாணங்களாலே - ஸர்வேஶ்வரனை "ஸர்வஜ்ஞன், ஸர்வஶக்தி" என்னுநின்றதே. ஶக்தி யுண்டாஞலும் ப்ரயோஜநமில்லையே, ப்ராப்தனுகவேணும். "மாதாபிதாப்ராதா" (மாதாபிதாப்ராதா) இத்யாதியாலே-அவனே ஸர்வவிதபந்துவுமாகச் சொல்லாநின்றதே: "எம்மானுமெம்மனையும்" இத்யாதி-ராமாநுஜராய் ப்ரஜையைப்பெற்று "யௌவநவிரோதி" என்று போகட்டுப்போ

---

தாளதாமரை ப்ரவேஶ; கீழுக்தார்த்தத்தை யநுவதித்துக்கொண்டு, இத்திருவாய்மொழியில் காளமேகத்தை வழித்துணையாகப் பற்றுகைக்கு உறுப்பான உபபத்தியை யருளிச்செய்வதாக அதிஷ்டிகை - நாளேல் இத்யாதிவாக்யத்வயம். உக்தி மாத்ரத்தாலே பெற்றதாமோவென்ன - அவன்செய்கிறோம்இத்யாதி. இப்படி நிஶ்சயித்தாலும் தேஶஸ்வபாவத்தையும் விரோதிபாஹுள்யத்தையும் பார்த்தால் ஸர்வேஶ்வரனையே துணையாகப் பற்றவேணுமென்கிரூர் - ஆகையாலே இத்யாதி. ஒருப்படுகை - உத்யோகப்படுகை. நெடுங்கைநீட்டாய் - அதிதூரமாய். துவாலாய் - அதிகமாய். துவாலானவை யெவையென்ன - அவித்யா இத்யாதி; அவித்யாதிகளடியாக பாதிக்கிற யமகிங்கரரை நினைக்கிறது. பூர்வம் ஸம்ஸரித்தானேயாகிலும் இப்போது ஹிதசிந்தை பண்ணுகிறானே: அது துணையாஞலோவென்ன - இஶ்ஶரீர இத்யாதி; ஆகையாலே ஸர்வேஶ்வரனே துணையாகவேணுமென்றபடி. ஹிதசிந்தைபண்ணிஞனே யாகிலும் என்றது - ப்ரபத்தி பண்ணிஞனேயாகிலுமென்றபடி. அவனே துணையாகவேணுமென்கிற நிர்பந்தமேதென்ன - வழிகொடு இத்யாதி. "உலகுசெய்வான்" என்று - ஜகத்காரணத்வம் சொல்லுகையாலே, ஸர்வஜ்ஞத்வாதிகளும் ஸித்தம். அவனுக்கு ஸர்வஜ்ஞத்வாதிகளுண்டென்னுமதுக்கு ப்ரமாணம்-யஸ்ஸர்வஜ்ஞ:இத்யாதி. இயம் முண்டகோபநிஷத். "பராஸ்ய ஶக்திர் விவிதைவ" இத்யாதி, "ஸர்வஶக்தி" என்னுமதுக்கும். ஸர்வஜ்ஞத்வாதிகள் அபேக்ஷிதமானவோபாதி ஸம்பந்தமும் வேணுமென்கிரூர் - ஶக்தியுண்டானுலும் இத்யாதி. ப்ராப்திக்கு ப்ரமாணத்வயம் - மாதாபிதா இத்யாதி, எம்மானும் இத்யாதி. "மாதா பிதா ப்ராதா நிவாஸஶ்ஶரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" இதி ஸுபாலோபநிஷத்; திருமொழி எழாம்பத்து இரண்டாந்திருவாய்மொழி மூன்றாம்பாட்டு, "எம்மானுமெம்மனையு மெனைப்பெற்றொழிந்ததற்பின் - அம்மானு மம்மனையுமடியேனுக்காகின்ற-" என் பிதாவும் என் மாதாவும் என்னைப்பெற்று "யௌவநவிரோதி" என்று விட்டுப்போனபின்பு, அந்த

வர்கள்; இவன்தான் வாஸநைபண்ணின முகத்தாலே "அம்மே!" என்றபோதாக, பேண்குரலாலே "ஏன்?" என்றும், "அப்பா!" என்றபோதாக, ஆண்குரலாலே "ஏன்?" என்றும், இப்படி முகங்கொடுத்துக்கொண்டு போகக்கடவனு யிருக்குமிறே அவன். ஶரீரமானது கட்டுக்குலைந்து ப்ராப்யபூமியிலே போய்ப் புகுமளவும் சேல்ல நடுவுண்டான விரோதிகளைப் போக்கிக் கொடுபோகைக்கு ஈடான விரகு அறியுமவனாகவேணும்; விரோதிதன்னை இருதுண்டமாக விட்டுக் கொடுபோகவல்ல ஶக்தி மானாகவேணும்; தான் தனக்குத் தஞ்சமல்லாதவன்று இவன் தனக்குத் தஞ்சமேன்று தன்னை இவன்கையிலே காட்டிக் கொடுக்கும்படி ஆப்தனாகவேணும். "ஸர்வஜ்ஞன், ஸர்வஶக்தி" என்று தானே ப்ரமாணப்ரஸித்தன்; "தஞ்சமாகியதந்தை தாயோடுதானுமாய்" என்று இவர்தாமே "தஞ்சம்" என்றாரே. "மயர்வறமதிநலமருளினன்" என்று - ஈயாவானேன்னுமிடம் தாமே கைகண்டார். இனி ஶேஷியாயிருக்கையாலே தானே ப்ராப்தனாயிருக்குமிறே. ஆக, "நம்விரோதிகளைப் போக்கி ப்ராப்யபூமியளவும் கொண்டு போய் வழிநடத்துவான் காளமேகம்" என்றுஅத்யவஸித்து,—அருநிலங்களிலே வழிபோவார் "அகப்படை" என்று மிடுக்கராயிருப்பாரைக் கூட்டிக்கொண்டு தம் கைப்பொருளை அவர்கள் கையிலே கொடுத்து அமர்ந்தநிலத்திலே சென்றவாறே வாங்கிக் கொள்ளுவாரைப்போலே, ஶரீரவிஶ்லேஷ ஸமயத்தில் காளமேகத்தின் பக்கலிலே ஆத்மநிக்ஷேபத்தைப் பண்ணி, "ப்ராப்யபூமியிலேபுக்கால் பின்னை நமக்குஆக்கிக்கொள்ளக்கடவோம்" என்று வழித்துணையாகப் பற்றுகிறார். இஸ்ஸ்வபாவங்கள் ஒன்றுமில்லையேயாகிலும், அவன்முன்னேபோகப் பின்னேபோகாநின்றால் அவ்வடிவழகுதன்னையநுபவித்துக்கொண்டு போமதுவே ப்ரயோஜநமாகப் போரும்படியாய்த்துஇருப்பது. "வள்

---

பிதாவும் மாதாவும் அடியேனுக்காகிநின்ற என்று ஶப்தார்த்தம். எம்மான் - என் பிதா. எம்மனை - என் தாய். அம்மான் - தகப்பன். அம்மனை - தாய். இதுக்கர்த்தம் - ராமோ மாதா இத்யாதி. அபேக்ஷித குணாந்தர கதநார்த்தமாகக் கீழுக்தத்தை மீளவும் அருளிச்செய்கிறார் - ஶரீரமானது இத்யாதி. "அசுரரைத்தகர்க்கும்," "துணிக்கும்வல்லரட்டன்" இத்யாதியையுட்கொண் டருளிச்செய்கிறார் - விரோதி தன்னை இத்யாதி. "திருமோகூராத்தன்" என்கையாலே - 'ஆப்தன்'. ஜ்ஞாநஶக்திகள் ப்ரமாண ப்ரஸித்தங்களென்றருளிச்செய்யா நின்றுகொண்டு, இவனுடைய ஆப்ததைக்கும் ப்ரமாணம் அருளிச்செய்கிறார் - ஸர்வஜ்ஞன் இத்யாதி வாக்யத்வயத்தாலே. இக்குணங்கள் கார்யகரமாம் போது ஈயைவேண்டாவோவென்ன - மயர்வற இத்யாதி. கைகண்டார் என்றது - "அருளினன்" என்றதைப்பற்ற. கர்மோபாதிகமாய்வந்த ஸ்வாமித்வமேயன்றிக்கே, நிருபாதிகஸம்பந்தமும் இவனுக்குஉண்டென்கிறார் - இனி ஶேஷியாய் இத்யாதி. இப்படி விரோதிகளைப் போக்குகைக்கு அநுகுணமான குணங்களை நிரூபித்தவநந்தரம், இத்திருவாய்மொழியில் ப்ரமேயத்தைச் சேரப் பிடித் தருளிச்செய்கிறார் - ஆக இத்யாதி. அருநிலங்கள் - ஸ்யாதிக்யத்தாலே போகவரிதான ப்ரதேஶங்கள். அகப்படை - அந்தரங்கபரிகரம். அமர்ந்தநிலத்திலே வாங்கிக்கொள்வாரைப்போலே யென்றது - லௌகிகத்ருஷ்டாந்தமத்தனையல்லது, அவன கையிலே வாங்கிக்கொள்ளவில்லையிறே; அன்றிக்கே, "திருவேங்கடத்துக்கிவை பத்தும் பிடித்தார் பிடித்தார் - பெரியவானுள்நிலாவுவர்" என்கையாலே - இது ஆஶ்ரயணீயஸ்தலமும் அது போஃயஸ்தலமுமாகையாலே சொல்லுகிறாரென்றால் நல்லது. இங்கு ஆத்ம நிக்ஷேபம் ஆவது - துணையாகவேணுமென்கிற ப்ரார்த்தனை. தேஹவிஶ்லேஷஸமயிலும் ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணவேணுமோவென்ன,- ஆர்த்த ப்ரபந்நராகையாலே பண்ணுகிறாரென்றருளிச்செய்வர். "தோளுநான்குடைச் சுரிகுழல்" இத்யாதியைப் பற்ற அருளிச்செய்கிறார் - இஸ்ஸ்வபாவங்கள் இத்யாதி. ஶக்தியுண்டானாலும் போராது, மதிப்பும் வேணுமென்கிறார் - வள்ளலே இத்யாதி. மதிப்புக்கு ப்ரமாணம் - பரிஹார இத்யாதி.

ளலே!உன்றமர்க்கேன்றும் நமன்றமர்கள்ளர்போல்''என்கிறபடியே, எதிரிகள் கூசிப்போம் படி மதிப்பனாயிருப்பானொருவனைப் பற்றவேணுமிறே. ''**வரிஹர மதுஸூதந ப்ரபந்நாந்**'' (பரிஹரமதுஸூதந ப்ரபந்நாந்) என்று அவனும் சொல்லிவைத்தானிறே.

---

## முதற்பாட்டு.

---

தாளதாமரைத் தடமணிவயல்திருமோகூர்
நாளும்மேவிநன்கமர்ந்துநின்று அசுரரைத்தகர்க்கும்
தோளுநான்குடைச் சுரிகுழல்கமலக்கண்கனிவாய்
காளமேகத்தையன்றி மற்றொன்றிலம்கதியே.

*ஆ.—பண்டுசெய்த ஆஸ்ரித விரோதி நிரஸநரூபமான பராக்ரமங்களைத் தோற்றுவிக்கிற திருத்தோள்களையும், அழகாலே நிரவதிகஸௌந்தர்யமாயிருந்த திருக்குழல்களையும், திருக்கண்களையும், திருப்பவளத்தையும், காளமேகம்போலேயிருந்த திருமேனியையுமுடையனாய், திருநாட்டிற்காட்டிலும் திருமோகூரிலே அதிமாத்ரமாக ஸ்நேஹத்தைப் பண்ணி எழுந்தருளியிருந்த எம்பெருமானல்லது நமக்கு மற்றொரு ப்ராப்யமில்லை என்கிறார்,*

*ஒ.—முதற்பாட்டில், ப்ரதிகூல நிரஸநஸ்வபாவனான காளமேகத்தையொழிய வேறு நமக்கு ரக்ஷகரில்லை யென்கிறார்.*

*[தாளதாமரை என்று தொடங்கி] - பூவின் பெருமையைப் பொறுக்கவல்ல தாளையுடைய தாமரைத் தடமெல்லாம் பூக்கும் வயலையுடைய திருமோகூரிலே நாள் தோறும் அத்யாதரத்தைப் பண்ணி அநந்யப்ரயோஜநனாய்ச் சேர்ந்துநின்று.*

*ப.—முதற்பாட்டில், ப்ரதிகூலநிரஸந ஸ்வபாவனாய் நிரதிஸயபோக்ய பூதனான காளமேகத்தையொழிய நமக்கு ஸஹாயதயா மந்தவ்யரில்லையென்கிறார்.*

*தாள - தாளாரத்தையுடைய, தாமரை - தாமரைகளானவை, தடம் - தடாகங்களை, அணி - அலங்கரியாநிற்கிற, வயல் - வயலையுடைய, திருமோகூர் - திருமோகூரிலே, நாளும்மேவி - நித்யவாஸம்பண்ணி, நன்கு - மிகவும், அமர்ந்துநின்று - ஸ்வயம் ப்ரயோஜநமாம்படி உகப்போடே பொருந்திநிற்குமவனாய், அசுரரை - விரோதிகளான அஸுரர்களை, தகர்க்கும் - புடைத்துப்போகடும்படி, (பரிவோபமாய் வழிபோக்கில் நிழ*

---

''ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாஸஹஸ்தம் வததி யம: கில தஸ்ய கர்ணமூலே । பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் நவைஷ்ணவாநாம்'' இதி ஸ்ரீ விஷ்ணுபுராணே.(ங-எ-கங) ''வள்ளலே'' என்கிறவிடத்திலே அவனுக்கு மதிப்புத் தோற்றிற்றில்லையேயாகிலும், அவன்தமர்க்கு அதுண்டாகையாலே அவனுக்கு கிம்புநர்ந்யாயஸித்தமிறேயென்று கருத்து. ஶக்தியுண்டானால் போராதோ,மதிப்பும் வேணுமோவென்ன ருத்ரன் ஶக்திமானாயிருக்கச் செய்தேயும் மதிப்பில்லாமையாலே மார்க்கண்டேயன் நிமித்தமாக விழிப்புண்டானிறே'' என்றருளிச்செய்வர்.'ப்ராப்தனாயிருக்குமிறே' என்றவநந்தரம் 'வள்ளலேயுன்தமர்க்கு' இத்யாதியை யநுஸந்தித்து, அநந்தரம் 'இஸ்ஸ்வபாவங்களொன்றும்' இத்யாதியையநுஸந்தித்து, அநந்தரம் 'ஆக நம் விரோதிகளைப்போக்கி' இத்யாதிவாக்யத்தையநுஸந்திப்பது.'வள்ளலே'இத்யாதிக்குஸ்பஷ்டோர்த்த:.திருமொழிஎட்டாம்பத்துபத்தாந்திருமொழிஎட்டாம்பாட்டு,''வெள்ளைநீர்வெள்ளத்து'' இத்யாதி.

லைச்செய்யும்படி கற்பகப்பணைபோலேயிருக்கிற), நான்குதோளுடை - நாலுதிருத் தோளையுமுடையனாய், சுரிகுழல்-(அயர்வக்லேஶம்ஶமநமாய்த் துணையாகைக்கு யோக்ய மான) சுரிந்த துன்னுகுழலையுடையனாய், (பின்பேவருகிற என்னைப்புரிந்து கடாக்ஷிக் கைக்குஈடான), கமலக்கண் - கமலம்போன்றகண்ணையுடையனாய், (இளைப்பாறும்படி ஸ்மிதஸாஷணம்பண்ணும்), கனிவாய் - ஸ்நிக்யமான திருப்பவளத்தையுடையனாய், காளமேகத்தையன்றி - காளமேயம்போலே உதாரரூபத்தையுடையவனையொழிய, மற் றொன்று கதி - வேறுநமக்குத்துணையாக மந்தவ்யமாயிருப்பதொருவஸ்துவை, இலம் - உடையோமல்லோம். தாமரையைத் தடம்அணிந்ததாகவுமாம்.

இ.—முதற்பாட்டில், ப்ரதிகூல நிரஸநஸ்வபாவனன காளமேவத்தை யொழிய வேறு நமக்கு ரக்ஷகரில்லை யென்கிறார். [தாளதாமரை] - தாளையுடைய தாமரை. மலையைச்சுமந்தாற்போலே பூவின்பெருமையைப் பொறுக்கவல்ல தாளையுடைய தாமரை. சேற்றின் நன்மையாலே உரத்ததாளையுடைய தாமரை. "உரம்பெற்ற மலர்க்கமலம் உலகு அளந்த சேவடிபோல் உயர்ந்துகாட்ட" என்னக்கடவதிறே. [தட மணிவயல்] - பூவாலே அலங்கரிக்கப்பட்ட தடாகங்களையுடைய வயல். [திருமோகூர்]- ஊரில் போக்யதை வயலின் நிலத்திலே காணுமித்தனை. [நாளுமேவி] - நாள்தோறும் அத்யாதரத்தைப்பண்ணி. இவ்வூரில் விடிவுதோறும் அவனுக்கு "ஸூப்ரபாதாச மே நிஶா" என்னும்படியாய்த்து இருப்பது. [நன்கமர்ந்து நின்று] - அநந்யப்ரயோஜந னுய்ச் சேர்ந்துநின்று. அவ்வூரில்வாஸம் ஒன்றுக்காகவன்றிக்கே ஸ்வயம்ப்ரயோஜநமா யிருக்கை. [அசுரரை இத்யாதி] - அஸுரரை அழியச்செய்யுமா போலே, என் விரோயிகளைத்துணிக்கவல்ல தோள்களையுடையவன். "மஜஂவாவீக்ஷ்யஸிஂஹஂவாவ்யா வ்ஂவாவநகோசரா। நாஹாரயதிஸஂத்ராஸஂபாஹூராமஸ்யஸஂஶ்ரிதா" என்னக் கடவதிறே. விடுகாதாய்க் கிடந்தாலும் தோடிட்டகாதென்று தெரியுமாபோலே, தோள்களைக் கண்டபோதே விரோயிநிரஸநஶீலமென்று தோற்றியிருக்குமென்கை. இவன்பின்பே வழியேபோமிடத்துத் திருக்குழலை ஒருகால் பேண, நெடுநாள் ஸம் ஸாரத்தில்பட்ட க்லேஶமெல்லாம் தீரும்படியாய்த்திருப்பது. "கேஶவஃக்லேஶநாஶநஃ" [கமலக்கண்கனிவாய்] - வ்யயமெல்லாம் தோற்றும்படியான நோக்கும் ஸ்மிதமுமிருக் கிறபடி. ஸம்ஸாரத்தில் பொய்யருடைய நோக்கிலும் ஸ்மிதத்திலும்பட்ட நோவெல் லாம் ஆறும்படியிறே இருப்பது. "ஸஂதாபஂ ஜநயேத்ஸ்பஷ்டஂ ஹத்வாஸ்ய வ்யஸநீ பாபஸ்ய பாதகோ மா பூத்" [காளமேகத்தை] - வழி போம் போது முன்னே ஒருகாளமேகம் வர்ஷித்துக்கொண்டுபோகப் பின்னே போமாபோலே ஶ்ரமஹரமாயிறே இருப்பது. "ஸுவ்ருத்தஃ" என்கிற விஷயமாகையாலே, அவ்வாச நாற்றத்தைய நுபவித்துக்கொண்டுபோமித்தனை. [அன்றிமற்றொன்றிலம்கதியே] - அவனை யொழிய வேறுகதிஉடையோமல்லோம். வேறொருவரை ரக்ஷகமாக உடையோமல்லோம்.

ஈடு.—முதற்பாட்டு. மரணமான மஹாபயத்துக்கு விரோயிநிரஸநசீலனுன் காளமேவமல்லது துணையில்லையென்று அவனைப்பற்றுகிறார்.

---

முதற்பாட்டு.—தாளதாமரை இத்யாதி, "அசுரரைத்தகர்க்கும்" என்றுதொடங்கி "மற் றொன்றிலம்கதியே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - மரணமான இத்யாதி.

[தாளதாமரை]-மலையைச் சுமந்தாற்போலே பூவின்பெருமையைப் பொறுக்க வல்ல தாளையுடைய தாமரையென்கை. "உரம்பெற்றமலர்க்கமலம் உலகளந்தசேவடிபோ லுயர்ந்துகாட்ட" என்னக்கடவதிறே. சேற்றின்நன்மையாலே உரத்த தாளையுடைய தாமரையென்கை. [தடமணி] - இப்படிப்பட்ட பூக்களாலே யலங்கரித்தாற்போலே யிருக்குமாய்த்துத் தடம்: "உரம்பெற்றமலர்க்கமலம் உலகளந்தசேவடிபோலுயர்ந்து காட்ட" சேற்றுவாய்ப்பாலே உரம்பெற்றிருக்கிற கமலமானது ஓங்கிஅலர்ந்தபோது, திரு வுலகளந்தபோதெடுத்த திருவடிகளுக்குப் போலியாயிருந்தது. 'வரம்புற்றஇத்யாதி":—அப் போது, "ஸங்கைஸ்ஸுராணாம்" (ஸங்கைஸ்ஸுராணும்) என்கிறபடியே தேவர்கள் திரண்டு காலைநீட்டித் தலையைவணங்கித் தண்டனிட்டாற்போலே யிராநின்றதாய்த்து, செந்நெல்களானவை விழுந்து தலைசாய்ந்து கிடக்கிறபோது: இப்படிப்பட்ட தடங்களையும் வயல்களையுமுடைத்தான திருமோகூர். ஊரில் போக்யதையடைய வயலிலேகாணு மித்தனை. [நாளுமேவி] - நாள்தோறும் அத்யாதரத்தைப்பண்ணி. அவ்வூரில் விடிந்த விடிவுதோறும், அவனுக்கு "ஸுப்ரபாதா ச மே நிசா" (ஸுப்ரபாதாசமேநிசா) என்னும்படியாய்த்திருப்பது. [நன்கமர்ந்துநின்று] - இவ்வூரில் வாஸமொழிய வேறொரு ப்ரயோஜநத்தைக் கணிசியாதே இதுதானே ப்ரயோஜநமாக நின்று. [அசுரர் இத்யாதி] - அஸுரஸங்கத்தைத் துணித்தடக்கி விரோதியைப் போக்கிக்கொண்டு போகவல்லனென்று தோற்றும்படியான திருத்தோள்கள் நாலையுமுடைய. "இவர் இப்போதறிந்தபடியெங் ஙனே?" என்றுகேட்க, "விடுகோதானலும் தோடிட்டுவளர்ந்த காதென்றுதெரியுங்காண்" என்றருளிச்செய்தருளின வார்த்தை. [சுரிகுழல்] - நெடுநாள்பட ஸம்ஸாரத்தில்பட்ட

---

*தாளில்லாத தாமரையில்லையேயாயிருக்க, "தாள" என்று விசேஷித்ததுக்கு பாவம் -* மலையை இத்யாதி. *அப்படிப்பட்ட தாளுடைத்தோவென்ன* - உரம்பெற்ற இத்யாதி. *ஸப்தார்த்தம்* - சேற்றில் இத்யாதி. *"தாளதாமரை - அணி - தடம்" என்றந்வயித்தர்த்தம்* - இப்படிப்பட்ட பூக்களாலே இத்யாதி. *ப்ரஸ்துதமான "உரம்பெற்ற" இத்யாதி பாசுரத்துக்கு அர்த்தகதநார்த்தமாக ப்ரதீகோபாதாநம் - உரம் இத்யாதி. பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து ஒன்பதாந்திருமொழி எட்டாம்பாட்டு, "உரம்பற்றி" இத்யாதி. "உரம்பெற்ற" இத்யாதிக்கர்த்தம்* - சேற்றுவாய்ப்பாலே இத்யாதி. *"தாளதாமரை - அணி" என்றத்தை* * தடத்துக்கும் * வயலுக்கும் விசேஷணமாக்கி *யருளிச்செய்கிறார்* - இப்படிப்பட்டதடங்களையும் இத்யாதி. *பாவிதம்* - ஊரில் இத்யாதி. *போக்ய தாகதநத்தால் பாவம்* - அவ்வூரில் விடிந்த இத்யாதி. *அதாவது* - அவ்வூர் *நித்யாபூர்வபோக்யமா யிருக்கையாலே, அவனுக்கும் ஆதரம் நித்யாபூர்வமாயிருக்கும்*; இப்படியாகையாலே *விடிந்தவிடிவு தோறும் அவனுக்கு* "ஸுப்ரபாதா ச மே நிசா" *என்னும்படி யிருக்குமென்றபடி.* "அத்ய மே ஸபலம் ஜந்ம ஸுப்ரபாதா ச மே நிசா । யதுந்நித்ராப்ஜபத்ராக்ஷம் விஷ்ணோர் த்ரக்ஷ்யாம்யஹம் வபு:" *இதி பஞ்சமேம்ஸே அக்ரூர:*. (கஎ-ங) "ஸங்கைஸ்ஸுராணாம் திவி பூதலஸ்தைஸ் ததா மநுஷ்யைர் ககநே ச கேசரை: । ஸ்துத: க்ருதோ ந்ருப: ப்ரவகார ஸவ்யூஹதாஸோ ஸ்துதோ ஜந்யா விவர்த்தயே ஹரி:" *இதி* ஸ்ரீ *விஷ்ணுதர்மே மாங்கல்யஸ்தவே.*

*"நன்கமர்ந்துநின்று - நன்றாகப் பொருந்திநின்று" என்றத்தால் பாவம்* - இவ்வூரில் இத்யாதி. *தோளைக்கண்டமாத்ரத்திலே "அசுரரைத்தகர்க்கும்" என்று தோற்றுமோவென்கிற சங்கையை யநுவதிக்கிறார்* - இவர் இத்யாதி. *அதாவது திருத்தோள்களும்* * *ஜ்யாகிணகர்க்கசங்களாகையாலே, அஸுரநிரஸநத்தைத் தோற்றுவிக்குமென்றபடி. நம்பிள்ளை கேட்க நஞ்சீயரருளிச்செய்த வார்த்தை யென்றபடி. வழித்துணையாகப்பற்றுகிறஇவர் "சுரிகுழல்" என்று விசேஷிக்கிறதுக்கு பாவம் -*

ஸகலதாபங்களும் ஆறும்படியிருக்குமாய்த்து, பின்னே போகிறவனுக்கு முன்னே போகிறவன் ஒருகால் திருக்குழலைக் குலைத்து நுழுந்த; "கேஶவ꞉ க்லேஶநாஶந꞉" (கேஶவ꞉க்லேஶநாஶந꞉) [கமலமித்யாதி] - க்ஷுத்ரவிஷயங்களினுடைய பொய்யான நோக்கிலும் பொய்யானமுறுவலிலும் அகப்பட்ட நெஞ்சாறலெல்லாம் தீரும்படி மெய்யானநோக்கும் மெய்யானமுறுவலுமிருக்கும்படி சொல்லுகிறது. [காளமேகத்தை] - †ராஜாக்கள்போம்போது முன்னே மேகர்நீர் விடுமாபோலே, முன்னாய் காளமேகம் ஸௌந்தர்யாம்ருதத்தை வர்ஷித்துக்கொண்டுபோக, பின்னே அக்குளிர்வாசத்தையநுபவித்துப் போகலாயிருக்குமாய்த்து. [அன்றிமற்றொன்றிலம் கதியே] - காளமேகத்தையொழிய வேறு வழித்துணையுடையோ மல்லோம். (க)

---

## இரண்டாம் பாட்டு.

---

இலம்கதிமற்றொன்றுஎம்மைக்கும்ஈன்தண் துழாயின்
அலங்கலங்கண்ணிஆயிரம்பேருடையம்மான்
நலங்கொள்நான்மறைவாணர்கள்வாழ் திருமோகூர்
நலங்கழலவனடிநிழல் தடமன்றியாமே.

ஆ —(இலங்கதி.) - நமக்கெற்றைக்கும் ஸமஸ்த கல்யாண குணோபேதனான அவன் திருவடிகளின் நிழலாகிற குளிர்ந்த தடாகமல்லது மற்றொரு ப்ராப்யமில்லையென்கிறார்.

ஓ.—இரண்டாம்பாட்டில், ஆஶ்ரிதர்க்கு பரமபோக்யமான போக்யதையையும் அவர்களுக்கு உஜ்ஜீவநஹேதுவான திருநாமங்களையு முடையனானவனுடைய பரமபோக்யமான திருவடிகளல்லது காலதத்த்வமுள்ளதனையும் வேறு புகலுடையோ மல்லோம் என்கிறார்.

[எம்மைக்கும்] - எப்பிறப்புக்கும். [ஈன்தண்துழாயின் என்று தொடங்கி] - செவ்வியையும் குளிர்த்தியையுமுடைய திருத்துழாயினுடைய ஒளியையுடைத்தான அழகிய மாலையையும், குணசேஷ்டிதாதிகளுக்கு வாசகமான அபர்யந்தமான திருநாமங்களையுமுடைய ஸர்வேஶ்வரனுமாய், ஆந்ருஶம்ஸ்யாதிகளையுடையராய் எம்பெருமானுக்

---

நெடுநாள் இத்யாதி. அப்படி தாபஹரமோவென்ன, ப்ரமாணம்-கேஶவ꞉ இத்யாதி. "நாஶகவது ரோகஷூயதே நவுஷிஷதீ꞉। கிம்க்யாநாமிஷ்ட தேவ꞉கேஶவ꞉க்லேஶநாஶந꞉" இதி மஹாபாரதே. "கேஶவ꞉" என்றதுக்கு - ப்ரஶஸ்தகேஶத்வத்திலே நோக்கு. சுரிகுழல் - சுருண்டகுழல். "கமலக்கண்கனிவாய்" என்றதுக்கு ப்ரக்ருதாநுகுணமாக பாவம்-க்ஷுத்ரவிஷயங்களினுடைய இத்யாதி. "வழித்துணை" என்றதுக்கநுகுணமாக "காளம்" என்று விசேஷித்ததுக்கு பாவம் - ராஜாக்கள்போம்போது இத்யாதி. மேகர் - மார்க்கசோதகர். நீர்விடுகிறவர்களுமாம். மேகஶப்தம். "மிஹ ஸேசநே" என்கிற தாது நிஷ்பந்நமாகையாலே, அத்தையுட்கொண்டு- வர்ஷித்துக்கொண்டுபோகவென்றது. குளிர்வாசத்தை - குளிர்ந்தவாஸனையை. 'தாளதாமரை - அணி - தடம், தாளதாமரை - அணிவயல் திருமோகூர்' இத்யாரப்யாந்வய꞉. (க)

---

† ராஜாக்கள் போம்போது என்னுமிடத்தில் 'போம்போது' என்பதே அடையவளைந்தானரும்பதத்துப் பாடம்.

வைய மாலையையும், குணசேஷ்டிதாதிகளுக்கு வாசகமான அபர்யந்தமான திருநாமங்களையுமுடைய ஸர்வேஶ்வரனுமாய், ஆந்ருஶம்ஸ்யாதிகளை யுடையராய் எம்பெருமானுக்குங்கூட "ஆஶ்ரிதஸம்ரக்ஷணமே பரமதர்மம்" என்று ஓதுவிக்கும்படியாக வேதார்த்தம் கைவந்திருக்குமவர்கள் நிரந்தரமாக அநுபவிக்கிற திருமோகூரிலே ஆஶ்ரிதருடைய குணதோஷநிரூபணம் பண்ணாத திருவடிகளை யுடையவனுடைய பாதச்சாயையாகிற பொய்கையை யொழிய.

ப.—அநந்தரம், நிரதிஶயபோக்யமானதனைப் நிரந்தராநுபவாஶ்ரயமாமூர்த்தியையுடைய ஸர்வேஶ்வரன் திருவடிகளையொழிய ஸர்வாவஸ்தையிலும் வேறொருமதிப்புமுடையோமல்லோ மென்கிறார்.

ஈன் - பூந்தாரையீன்கிற, தண் - குளிர்ந்த, துழாயின் - திருத்துழாயை யுடைத்தாய், அலங்கல் - அசையாநிற்கிற, அம் - அழகிய, கண்ணி - மாலையையுடையனைப், ஆயிரம்பேருடை - அநுபாவ்யமாய் அஸங்க்யாதமான திருநாமங்களையுடைய, அம்மான் - நிருபாதிகஶேஷியாய், நலங்கொள் - ஆந்ருஶம்ஸ்யாதி விலக்ஷணகுணங்களையுடையராய், நான்மறை - நாலுவேதங்களுக்கு, வாணர்கள் - நிர்வாஹகரானவர்கள், வாழ் - ரக்ஷகத்வாதி குணாநுபவத்தாலேவாழுகிற, திருமோகூர் - திருமோகூரிலே வர்த்திக்கிறவனைப், நலங்கழலவன் - ஆஶ்ரிததாரதம்யம்பாராதே நம்மைக்கிட்ட அழகிய வீரக்கழலையுடையவனுடைய, அடிநிழல் - பாதச்சாயையாகிற, தடமன்றி - தடாகமொழிய, யாம் - நாம், எம்மைக்கும் - எல்லாஜந்மத்திலும், கதி - ப்ராப்யமாக, மற்றொன்று - வேறொன்றை, இலம் - உடையோமல்லோம். ஈன்துழாய் - இனிய துழாய் என்றுமாம். அலங்கல் - மாலையாய், கண்ணி - தாராய், தொடையாகவுமாம். அலங்கல் - அலங்காரமாகவுமாம்.

இ.—இரண்டாம்பாட்டில், போக்யமான ஒப்பனையையும் உஜ்ஜீவநஹேதுவான திருநாமங்களையுமுடையவனுடைய திருவடிகளல்லது வேறுகாலதத்வமுள்ளதனையும் புகலுடையோ மல்லோம் என்கிறார்.

[எம்மைக்கும் - மற்றொன்று - இலங்கதி] - இவ்வார்த்தை ஒரு ஜந்மத்துக்கன்றிக்கே, எல்லா ஜந்மத்துக்கும் இதுவேவார்த்தை என்கை. [எம்மைக்கும்] - எப்பிறப்புக்கும்; எல்லாக்காலங்களிலுமென்றபடி. [ஈன்தண்துழாய் இத்யாதி] - தாரையும் குளிர்த்தியையுமுடைய திருத்துழாயின் ஒளியையுடைத்தான அழகிய மாலை. [அலங்கல்] - ஒளியென்னுதல், அசைவென்னுதல்; பின்னே போகாநின்றால் அடிமாறியிடும்போது வளையமசைந்து வருகிறபடி என்னுதல், திருமேனியிலே சேருகையால் வந்த புகரைச் சொல்லுதல். [ஆயிரம்பேருடை] - ஒப்பனைக்குத்தோற்று ஏத்துகைக்கு அஸங்க்யாதமான திருநாமங்களையுடையவன். [அம்மான்] - அழகின்றிக்கே யொழிந்தாலும் ஏத்துகைக்கு ப்ராப்தமான விஷயம். [நலங்கொள் இத்யாதி] - "ஆந்ருஶம்ஸ்யமே வேதார்த்தம்" என்று வேததாத்பர்யம் கைவந்திருக்குமவர்களாய் வேதநிர்வாஹகரானவர்கள் நித்யாநுபவம்பண்ணுகிற தேஶம். அத்தேஶவாஸத்தாலே, "ஆஶ்ரிதஸம்ரக்ஷணமே பரமதர்மம்" என்று ஈஶ்வரனுக்கும் அதிலே நிஷ்டனாகவேண்டியிருக்கும் தேஶம். அவ்வூரிலே ஆஶ்ரயிக்கச்சென்றாரை, "ஸமாஹிதா ஸ்தே ப்ராஹ்மணா:" என்னுமவர்கள். [நலங்கழல்] - ஆஶ்ரிதருடைய குணதோஷநிரூபணம் பண்ணாத திருவடிகள். அவர்கள் ப்ரேமார்த்ராய், "வத்யதாம்" என்றாலும் "ந த்யஜேயம்" என்னுமவன். [அவனடிநிழல் தடமன்றியாமே] - அவனுடைய பாதச்சாயை

யாகிற பொய்கையொழிய. [யாம் - இலங்கதி மற்றொன்று எம்மைக்கும்] - அவன் தானே, "வயூதாழ்" என்றாலும் புறம்பு புகலற்றிருக்கிறபடி.

ஈடு.—இரண்டாம்பாட்டு. ஹோகஹேதுவான ஒப்பனையையும் உஜ்ஜீவந ஹேதுவான திருநாமங்களையு முடையவனுடைய திருவடிகளல்லது வேறு, காலதத்த்வ முள்ளதனையும் புகலுடையோமல்லோம் என்கிறார்.

[இலங்கதிமற்றொன்று எம்மைக்கும்] (எம்மைக்கும் - மற்றொன்று - இலங்கதி) - இவ்வார்த்தை ஒருஜந்மத்துக்கன்றியே, எல்லாஜந்மத்துக்கும் இதுவேவார்த்தை. எல்லாக் காலத்துக்கும் இதுஒழிய வேறு துணையுடையோமல்லோம். [ஈன் இத்யாதி] - தாரையும் குளிர்த்தியையு முடைய திருத்துழாயின் ஒளியையுடைத்தான அழகியமாலை. [அலங்கல்] - ஒளியேன்னுதல், அசைவென்னுதல்; பின்னே போகாநின்றால் அடிமாறி யிடும்போது வளையம் அசைந்துவருகிறபடியென்னுதல்; திருமேனியிலே சேருகையாலே வந்த புகரைச் சொல்லுதல். [ஆயிரம்பேருடை] - தோளும் தோள்மாலையுமான அழகைக்கண்டு இவன் ஏத்தப்புக்கால், இழிந்தவிடமெல்லாம் துறையாம்படி அஸங்க்யாத மான திருநாமங்களையுடையவன் [அம்மான்] - வடிவழகுகண்டு அப்ராப்த ஸ்தூலத் திலே ஏத்திறாகவேண்டாதே, "ஆழியங்கையம்மானை யேத்தாதயர்த்து - வாளாவிருந் தொழிந்தேன் கீழ்நாள்களெல்லாம்" என்று ஏத்தாதநாளைக்கும் வயிறுபிடிக்கவேண்டும் படியான விஷயம். [நலங்கொள் இத்யாதி] - "ஆந்ருஶம்ஸ்யமே வேதார்த்தம்" என்று வேததாத்பர்யம் கைவந்திருக்குமவர்களாய், வேதத்துக்கு வ்யாஸபதம் செலுத்தவல்ல ரானவர்கள் நித்யவாஸம்பண்ணுகிற தேசம். அவ்வூரில் வர்த்தனந்தானேயிறே வாழ்ச்சி. அத்தேசவாஸத்தாலே, "ஆஶ்ரிதஸம்ரக்ஷணமே பரமதர்மம்" என்று ஈஶ்வரனுக்கும் அதிலே நிஷ்டனாகவேண்டும் தேசம். அவ்வூரிலே ஆஶ்ரயிக்கச் சென்றாரை, "**அஸ்மாபிஸ்துல்யோபவது**" (அஸ்மாபிஸ்துல்யோபவது) என்னுமவர்கள். [நலங்கழலவன்] - ஆஶ்ரிதருடைய குணதோஷநிரூபணம்பண்ணாத திருவடிகள். அவர்கள் தாங்கள்

---

இரண்டாம்பாட்டு.—இலங்கதி இத்யாதி. "ஈன் தண்துழாய்" இத்யாரப்ய, "அம்மானடி யிழற்றடமன்றி - எம்மைக்கும் - மற்றொன்று - இலம்கதி" என்றவற்றைக் கடாக்ஷித்தவதாரிகை - ஹோகஹேது இத்யாதி.

"எம்மைக்கும்" என்றதுக்கு ஹாவம் - இவ்வார்த்தை இத்யாதி. எம்மைக்கும் - எல்லா ஜந்மத்துக்கும். ஆனால் இவரின்னமும் ஒருஜந்மமுண்டாகச் சொல்லுகிறாரோவென்ன - எல்லாக் காலத்துக்கும் இத்யாதி. "ஈன்" என்று - தாராய், பூவென்னுதல். பூவை, ஈன்கிற - ப்ரஸவியா நிற்கிற வென்னுதல். உக்தார்த்த த்வயத்தையும் வ்யுத்க்ரமேணவிவரிக்கிறார் - பின்னே இத்யாதி. கீழில் பதத்தையுங்கூட்டி ஹாவம் - தோளும் இத்யாதி. கீழோடேகூட்டி "அம்மான்" என்றதுக்கு ஹாவம் - வடிவழகு இத்யாதி. 'ஆழியங்கையித்யாதி' பெரியதிருவந்தாதி எண்பத்திரண்டாம் பாட்டு; "தெரிந்துணர்வொன்றின்மையால்" இத்யாதி. அயர்த்து - மறந்து. வாளா - வ்யர்த்த மாக. நலம் - க்ருபை; கொள்கை - உடைத்தாகை; ஆந்ருஶம்ஸ்யத்தை யுடையவர்களென்றபடி. "நலங்கொள்" என்றவநந்தரம் "நான்மறைவாணர்" என்றுவிசேஷித்ததுக்கு ஹாவம் - ஆந்ருஶம்ஸ்யமே இத்யாதி. நான்மறைவாணர்கள் - நாலுவேதங்களுக்கு நிர்வாஹகரானவர்கள். வாணர் - நிர்வாஹகர். வர்த்திக்கிறவென்றதே, "வாழ்" என்றதுக்கு ஹாவம் - அவ்வூரில் இத்யாதி. இந்த பதப்ரயோகத்துக்கு ஹாவம் - அத்தேஶ இத்யாதி. "நலங்கொள் நான்மறைவாணர்கள்" என்றதுக்கு ஃபலிதம் - அவ்வூரிலே இத்யாதி. '**ஸஹாஸ்மாபிஸ்துல்யோபவது ... விபீஷணோ ... நஃ**' இதி யுத்தகாண்டே

ப்ரேமாந்தராய், "வத்யதாம்" (வத்யதாம்) என்றும், "நத்யஜேயம்" (நத்யஜேயம்) என்னுமவன். [அவனடிநிழல்தடமன்றியாமே] - அவனென்கிற பதம் இரண்டிடத்தி லும் அந்வயிக்கிறது அவன் பாதச்சாயையாகிற பொய்கையை யொழிய நாம் வேறொரு கதியடையோ மல்லோம். (௨)

---

# மூன்றாம் பாட்டு.

---

அன்றியாமொருபுகலிடம்இலம் என்றென்றலற்றி
நின்றநான்முகன்அரனொடு தேவர்கள்நாட
வென்றுஇம்மூவுலகளித்துஉழல்வான்திருமோகூர்
நன்றுநாம்இனிநணுகுதும் நமதிடர்கெடவே.

ஆ.—(அன்றியாம்.) - ஆதலால், அர்த்திகல்பகமாயிருந்தவனைத் திருமோ கூரிலேசென்று நம்முடைய க்லேசமெல்லாம் போம்படி ஸேவிப்போம் என்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில், ஸர்வலக்ஷணஶீலனை ஸர்வேஶ்வரன் வர்த்திக் கிற திருமோகூரை நம்முடைய ஸமஸ்த து:க்கங்களுங்கெடச்சென்று ப்ராபிப்போம்; இது ஹிதம் என்கிறார்.

[அன்றியென்று தொடங்கி] - வேறு நாங்கள் ஒருபுகலிடம் உடையோமல் லோம் என்று நிரந்தரமாகக் கூப்பிட்டு ப்ரஹ்மருத்ர ப்ரமுகரான தேவர்கள் ஆஶ்ர யிக்க, ப்ரதிபக்ஷத்தை வென்று, இந்த மூன்றுலோகத்தையும் ரக்ஷித்து அதுவே தனக்குப் போதுபோக்கானவனுடைய திருமோகூரை. [நன்று - நணுகுதும்] - நன் றாகக் கூடுவோம்.

ப.—அநந்தரம், அகிலஜகத்ரக்ஷண ஸ்வபாவனானவனுடைய திருமோ கூரை, நமக்குத் துணை தேட்டமாம்படியான து:க்கம் கெடும்படி கிட்டுவோமென்கிறார்.

அன்றி - உன்னையொழிய, யாம் - நாங்கள், ஒருபுகலிடம் - வேறொருபுக லிடம், இலம் - உடையோமல்லோம், என்றுஎன்றுஅலற்றி - என்று தளர்த்திதோனறும் படி பலகாலும் கூப்பிட்டு, நின்று - (ப்ரயோஜநலாபத்தளவும்) நின்று, நான்முகன்அர னொடு - ப்ரஹ்மருத்ரர்களோடுகூட, தேவர்கள் - தேவஜாதிகள், நாட - தேடியாஶ்ர யிக்க, வென்று - விரோதிகளைவென்று, இம்மூவுலகு-இந்தஜகத்த்ரயத்தையும், அளித்து உழல்வான் - ரக்ஷிக்கையேயாத்ரையா யிருக்குமவனுடைய, திருமோகூர் - திருமோ கூரை, நாம்-,நமது-நம்முடைய, இடர் கெட - (வழித்துணைதேட்டமான) மநோது:க்கம் தீரும்படி, இனி - (ரக்ஷகனானவன் ஸந்நிஹிதனான) பின்பு, நன்று - அநந்யப்ரயோஜந ராய்க்கொண்டு, நணுகுதும் - கிட்டக்கடவோம்.

---

அஷ்டாதஶே. (௩-அடு) திருவடிகளுக்குநன்மையேதென்ன-ஆஶ்ரிதருடைய இத்யாதி. "குணதோஷ நிரூபணம்பண்ணாத" என்றதால்லலிதம் - அவர்கள் தாங்கள் இத்யாதி என்று ஏகார்த்தமாதல்; 'ஆஶ்ரிதருடைய' இத்யாதிவாக்யம் - 'நலம்' என்றத்தை * கழலுக்கு விசேஷணமாக்கி அர்த்த மாய், "அவர்கள் தாங்கள்" இத்யாதிவாக்யம் - அவனுக்குவிசேஷணமாக்கி ஆத்தாந்தரபரமாதல். 'ஈன் - தண்துழாயின்' என்றுதொடங்கி, 'நலங்கழலவ னடிநிழற்றடமன்றியாம் - எம்மைக்கும் - மற்றொன்று - கதி - இலம்' இத்யந்வயம். "அவன்" என்றது, கீழும்மேலும் அந்வயிக்கிறது. (௨)

இ—மூன்றும்பாட்டில், ஸர்வரக்ஷகன் வர்த்திக்கிற திருமோகூரை, நம்முடைய ஸகலது:க்கங்களும் கெடச்சென்று ப்ராபிப்போம் என்கிறார்.

[அன்றி இத்யாதி] - "வேறு நாங்கள் ஒருபுகலிடமறியோமல்லோம்" என்றாய்த்து ப்ரஹ்மாதிகள் வார்த்தை. அநந்யப்ரயோஜநர் சொல்லும் வார்த்தையைச் சொல்லுவர்களாய்த்து இவன்முகங் காட்டுகைக்காக. [என்றென்று அலற்றி] - நிரந்தரமாகக் கூப்பிட்டு. [நின்று] - தங்கள் ப்ரயோஜநம் பெற்றாலல்லது மீளமாட்டாதே நின்று, ப்ரஹ்மருத்ரர்களோடே தேவர்கள் ஆச்ரயிக்க, அவர்கள் ப்ரதிபக்ஷத்தை வென்று, இந்தஸகலலோகங்களையும் ரக்ஷித்து அதுவே யாத்ரையாயிருக்கிறவன் வர்த்திக்கிற தேசம். [இனி - நாம் - நன்று - நணுகுதும்] - அவன் ஸர்வரக்ஷகனானபின்பு, ரக்ஷகாபேக்ஷையுடைய நாம் நன்றாகக்கூடுவோம். ஸ்ரீமதுரையை காலயவநஜராஸந்தாதிகள் கிட்டினாற்போலன்றியே, ப்ரஹ்மாதிகள் க்ஷீராப்தியைக் கிட்டினாற்போலுமன்றியே, அநந்யப்ரயோஜநராய்க் கிட்டுவோம். [நமதிடர் கெடவே] – வழித்துணை தேடி க்லேசிக்கிற நம்முடைய து:க்கங்கெட.

ஈடு.—மூன்றும்பாட்டு. ஸர்வரக்ஷகனானவன் வர்த்திக்கிற திருமோகூரை, நம்முடைய ஸகலது:கமும் கெடச்சென்று ப்ராபிப்போமென்கிறார்.

[அன்றி இத்யாதி] - ப்ரயோஜநாந்தரபரரும் அநந்யப்ரயோஜநருடைய பாசுரத்தைச் சோல்லுவர்களாய்த்து அவன்முகங்காட்டுகைக்காக. "தேவரையொழிய நாங்கள் ஒருபுகலுடையோ மல்லோம்" என்று நிரந்தரமாக அடைவுகெடச்சோல்லிக் கூப்பிட்டு. [நின்று] - அநந்யப்ரயோஜநரைப்போலே தங்கள் ப்ரயோஜநம் கைபுகுருமளவும் நின்று. [நான்முகன் இத்யாதி] - சதுர்முகன், ருத்ரன், இவர்களோடேகூட தேவஜாதியடைய ஆச்ரயிக்க, [வென்றுஇத்யாதி] - அவர்கள் ப்ரதிபக்ஷத்தைவென்று, அவர்களுக்கு விஷயமான இத்த்ரைலோக்யத்தையும் ரக்ஷித்து, அதுவே யாத்ரையாயிருக்குமவன் வந்து வர்த்திக்கிற தேசமாய்த்து. [நன்றுநாமினிநணுகுதும்] (இனி - நாம் - நன்று - நணுகுதும்) - அவன் ஸர்வரக்ஷகனானபின்பு, ரக்ஷகாபேக்ஷையுடைய நாம் நன்றாகக்கிட்டுவோம். ஸ்ரீமதுரையிலே காலயவநஜராஸந்தாதிகள் கிட்டினாற்போலேயன்றிக்கே, "நீணகர்நீளெரிவைத்தருளாய்" என்று ப்ரஹ்மாதிகள் க்ஷீராப்தியைக் கிட்டினாற்போலுமன்றிக்கே, அநந்யப்ரயோஜநராய்க் கிட்டுவோம். [நமதுஇடர்கெடவே] - "ஆவாராார்துணை" என்றிருக்கிற நம்முடைய க்லேசம்கெட. (௩)

---

மூன்றும்பாட்டு.—அன்றி யாம் இத்யாதி. உத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஸர்வரக்ஷகனானவன் இத்யாதி.

ப்ரயோஜநாந்தரபரரானவர்கள் "அன்றியாம் ஒருபுகல்" என்பானென்? என்ன - ப்ரயோஜநாந்தரபரரும் இத்யாதி. சப்தார்த்தம் - தேவரை இத்யாதி. நாடுகை - தேடுகையாய், மநஸ்ஸாலேயாச்ரயிக்கை. "வென்று, இம்மூவுலகு" என்று பதச்சேதம். "நன்று" என்றவிசேஷணத்துக்கு ஹாவம் - ஸ்ரீமதுரையிலே இத்யாதி. "நீணகர்" இத்யாதிக்கு - லங்கையை உஜ்ஜ்வலிப்பிக்க வேணுமென்றர்த்தம். திருவிருத்தம், "பேணலமில்லாவரக்கர்" இத்யாதி. 'அன்றியாம்' இத்யாரப்ய, 'திருமோகூரை - இனி - நாம் - நமதிடர்கெட - நன்று - நணுகுதும்' இத்யந்வய:. (௩)

## நான்காம் பாட்டு.

இடர்கெடஎம்மைப்போந்தளியாய்என்றென்றேத்திச்
சுடர்கொள்சோதியைத் தேவரும்முனிவருந்தொடரப்
படர்கொள்பாம்பணைப் பள்ளிகொள்வான்திருமோகூர்
இடர்கெடஅடிபரவுதுந்தொண்டீர்!வம்மினே.

ஆ —(இடர்கெட.) - ப்ரஹ்மாதிகள் ஸ்வாபேக்ஷிதங்களைப்ப்ரார்த்திக்கைக்கு எளியனாகைக்காகத் திருப்பாற்கடலிலே புகுந்தருளின அவன், அப்படியே நமக்கும் நம்முடைய அபேக்ஷிதத்தை ப்ரார்த்திக்கைக்கு எளியனாய்க்கொண்டு திருமோகூரிலே புகுந்தருளினான்: அவன் திருவடிகளையே ஸேவிப்போம்: வாருங்கோள் என்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், நம்முடைய ஸமஸ்த து:க்கங்களும்போக திருமோகூரில் எம்பெருமானை ஆஸ்ரயிப்போம், வாருங்கோள் என்று ஸ்ரீவைஷ்ணவர்களை அழைக்கிறார்.

[இடரென்று தொடங்கி] - விலக்ஷணமான அழகையுடையவனை, தேவர்களும், முனிவர்களும், எங்களுடைய ஸமஸ்தது:க்கங்களும் போம்படிபோந்து, ரக்ஷித்தருளாய் என்று பலகாலும் ஆஸ்ரயிக்கலாம்படி, தன்னுடைய ஸ்பர்ஸத்தாலே வளரா நின்றுள்ள திருவநந்தாழ்வான்மேலே பள்ளிகொள்ளுமவன் அப்படியே நமக்கு ஸுலபனாகைக்காக நின்றருளின திருமோகூரிலே.

ப.—அநந்தரம், ஜகத்ரக்ஷணார்த்தமாக அநந்தஸாயியானவனுடைய திருவடிகளை யாஸ்ரயிப்போம் வாருங்கோளென்று,ருசியையுடையரான ஸாத்விகரை யழைத்தருளுகிறார்.

'இடர்கெட - விரோதிகளால் வந்த து:கம் தீரும்படி, போந்து - எழுந்தருளிப்போந்து; எம்மை - எங்களை, அளியாய் - ரக்ஷிக்கவேணும்,' என்றென்று - என்று பலகாலும் தளர்த்தித்தோன்ற, ஏத்தி - ஸ்துதித்து, (அத்தாலே), சுடர்கொள் - பேரொளியையுடைத்தான, சோதியை - தேஜோமயமாயுள்ள திருமேனியை, தேவரும் - ஸ்வாபிமாநிகளான தேவர்களும், முனிவரும் - (ஐஸ்வர்யார்த்திகளாய் தபஸ்ஸுபண்ணுகிற) ருஷிகளும், தொடர - அநுவர்த்தித்து ஆஸ்ரயிக்கைக்காக, படர்கொள் - ஸ்வஸ்பர்ஸத்தாலே விரிவையுடைத்தாய், பாம்புஅணை - ஜாதிப்ரயுக்தமான மென்மை குளிர்த்தி நாற்றத்தையுடைய திருவரவணையிலே, பள்ளிகொள்வான் - பள்ளிகொண்டருளுகிறவனுடைய, திருமோகூர் - திருமோகூரிலே, இடர் - (நம்முடைய)† அஸம்ஸ்ரவது:க்கம், கெட - போம்படியாக, தொண்டீர் - ஆஸ்ரயணருசியை யுடையீர்களான நீங்கள், அடி - அவன் திருவடிகளை, பரவுதும் — ஸ்துதிப்போம்; வம்மின் - வாருங்கோள்!

இ—நாலாம்பாட்டில், நம்முடைய ஸமஸ்தது:க்கங்களும்போக, திருமோகூரிலேவந்து ஸுலபனாய்நிற்கிறவனை ஆஸ்ரயிக்கப்போருங்கோள் என்று, ஸ்ரீவைஷ்ணவர்களை அழைக்கிறார்.

[இடர்கெட இத்யாதி] - ''எம்மை-இடர்கெட போந்தளியாய்'' என்றாய்த்து ஸ்வாபிமாநிகளுக்கும் ஸாபாநுக்ரஹ ஸமர்த்தர்க்கும் வார்த்தை. வேதாபஹாராதி

† அஸம்ஸவது:கம் - ஸஹாயாஸம்ஸவது:கம் என்பர்.

துக்கங்கள்போக. [எம்மை] - முன்பு "ஸம்ஸ்ரோஹம்" என்றிருந்தவர்கள், ஆபத்து மிக்கவாறே, "ஏஹிபஸ்யஸரீராணி" என்னுமாபோலே தங்கள் வெறுமையை முன்னிடுமத்தனை. [போந்தளியாய்] - அவதரித்து ரக்ஷிக்கவேணு மென்பர்கள். [என்றென்றேத்தி - தொடர] - தங்கள் ஆபத்தாலே இடைவிடாதே புகழ்ந்து வடிம்பிட்டு ஆஸ்ரயிக்கைக்காக. [சுடர்கொள் சோதியை] - "ஆபத்தாலேயாகிலும் நம்பாடே வரப் பெற்றோமே!" என்று உஜ்ஜ்வலனாயிருக்குமவனை யென்னுதல், விலக்ஷணமான அழகை யுடையவனாகையாலே ஸ்வயம்ப்ரயோஜநமானவனைக் கிடீர் துக்கநிவர்த்தகனாக நினைத்தது என்னுதல். [தேவரும் முனிவரும் தொடர] - தேவதைகளும், ஸாபாநுக்ரஹஸமர்த்தரான ருஷிகளும்: "ஸம்ஸ்ரோஹம்" என்றிருப்பாரும், ஐஸ்வர்யார்த்தமாக யத்நப்பண்ணுவாரும் என்றுமாம். [படர்கொள் பாம்பணைப் பள்ளி கொள்வான்] - ஸ்வஸ்பர்ஸத்தாலே விக்ருதனானவனைச் சொல்லுகிறது. அநந்யப்ரயோஜநரை அடிமை கொள்ளுகிறவன்கிடீர் ப்ரயோஜநாந்தரபரர்க்கு முகங்கொடுக்க க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளுகிறான். [படர்கொள் பாம்பு] - ஸ்வஸ்பர்ஸத்தாலே வளராநின்றுள்ள திருவநந்தாழ்வான். [பள்ளிகொள்வான் திருமோகூர்] - தேவர்களுக்கு ஸுலபனானாற்போலே நமக்கும் ஸுலபனாகைக்காகத் திருமோகூரிலே நின்றருளினான். [இடர்கெட அடி பரவுதும்] - நம்முடைய ஸகலதுக்கங்களும் போம்படி அவனுடைய திருவடிகளை ஆஸ்ரயிப்போம். [தொண்டீர் வம்மினே] - என்னோடு ஸகோத்ரிகளாயிருப்பார் திரளுங்கோள்.

ஈடு.—நாலாம்பாட்டு. நம்முடைய ஸமஸ்தது:க்கங்களும்கெட, திருமோகூரிலேவந்து ஸுலபனாய் நிற்கிறவனை யாஸ்ரயிக்கவாருங்கோளென்று ஸ்ரீவைஷ்ணவர்களை யழைக்கிறார்.

[இடர்கெடவித்யாதி] - "எம்மை-இடர்கெட - போந்தளியாய்" என்றாய்த்து ஈஸ்வராபிமாநிகளுக்கும், ஸாபாநுக்ரஹஸமர்த்தர்க்கும் வார்த்தை. * வேதாபஹாராதி து:க்கங்கள் போக.[எம்மை]-முன்பு "ஸம்ஸ்ரோஹம்" (ஈஸ்வரோஹம்) என்றிருந்தவர்கள், ஆபத்து மிக்கவாறே "ஏஹிபஸ்யஸரீராணி" (ஏஹிபஸ்யஸரீராணி) என்னுமாபோலே தங்கள் வெறுமையை முன்னிடுமத்தனை. [போந்தளியாய்] - அவதரித்து ரக்ஷிக்கவேணும் என்பர்கள். முன்பேல்லாம் உபேக்ஷித்திருந்தவர்கள், ஒன்று

---

நாலாம்பாட்டு:—இடர்கெட இத்யாதி. "இடர்கெடவடிபரவுதும் தொண்டீர்வம்மின்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - நம்முடைய இத்யாதி.

"தேவரும் முனிவரும்" என்றத்தையும் கடாக்ஷித்து, "இடர்கெட எம்மைப்போந்தளியாய்" என்றதுக்கு, ஈடுபொடுதோற்ற அர்த்தமருளிச்செய்கிறார் - எம்மை இத்யாதி. "இடர்கெட" என்றதுக்கர்த்தம் - வேதாபஹார இத்யாதி. "எம்மை" என்றதுக்கு ஹார்த்தபாவம் - முன்புஈஸ்வரோஹம் இத்யாதி. "ஏஹிபஸ்யஸரீராணி முநீநாம் பாவிதாத்மநாம், ஹதாநாம் ராக்ஷஸைர்கோரை: பஹூநாம் பஹுதா வநே" இத்யாரண்யகாண்டே தண்டகாரண்யவாஸிநோ மஹர்ஷய:. (௬ - ௧௬) முன்பு இவனைக்கொண்டு ஒரு கார்யமில்லை யென்றிருந்தவர்கள், ஆபத்துவந்தவாறே, இவன்பக்கலிலே தங்கள் தைந்யந்தோற்றவந்தாஸ்ரயிக்கும் ப்ரகாரத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - முன்பேல்லாம் இத்யாதி. படிகாப்பார் - தலையாரிகள். வடிம்பிட்டு - நிர்ப்பந்தித்து. "பள்ளிகொள்வான்" என்றத்தைப்பற்ற - நீ

கேட்டவாறே படிகாப்பாரைப் பிடிக்குமாபோலே,நாங்கள்ஆபந்நராய்வர நீ கிடக்கிறதேன்? என்பர்கள். [என்றென்றேத்தி - தொடர] - தங்கள்ஆபத்தாலே இடைவிடாதே புகழ்ந்து வடிம்பிட்டு ஆஶ்ரயிக்கைக்காக. [சுடர்கொள்சோதியை] - "ஆபத்காலத்திலேயாகிலும் நம்பாடே வரப்பெற்றோமே!" என்று உஜ்ஜ்வலனாயிருக்குமவனை யென்னுதல். விலக்ஷணமான அழகையுடையனாகையாலே ஸ்வயம் ப்ரயோஜநமானவனைக்கிடீர் துஃக்க நிவர்த்தகனாக நினைத்தேன்னுதல். [தேவரும்முனிவரும்தொடர] - தேவர்களும், ருஷிகளும். "ஈஶ்வரோஹம்" (ஈஶ்வரோஹம்) என்றிருப்பாரும், ஐஶ்வர்யார்த்தமாக யத்நம்பண்ணுவாரும். [படர்கோள்பாம்பணைப் பள்ளிகோள்வான்] - அநந்யப்ரயோஜநரை யடிமை கொள்ளுகிறவன்கிடீர், ப்ரயோஜநாந்தரபரர்க்கு முகங்கொடுக்கைக்காக க்ஷீராப்தியிலே கண்வளர்ந்தருளுகிறான்! [படர்கோள்பாம்பு] - ஸ்வஸ்பர்ஶத்தாலே வளராநின்றுள்ள திருவநந்தாழ்வான். [பள்ளிகோள்வான்] - தன்னுடைய ஸ்பர்ஶத்தாலே ஸர்வஜ்ஞனானவனை அஜ்ஞரோபாதி நித்ரைக்கு இடங்கொடுக்கும்படி பண்ணவல்லனாய்த்துத் திருவநந்தாழ்வான். [திருமோகூர்] - தேவாதிகளுக்கு ஸுலபனானாற்போலே நமக்கும் ஸுலபனாகைக்காகத் திருமோகூரிலே நின்றருளினான். [இடர்கெடஅடிபரவுதும்] - அவனுடைய திருவடிகளை நம்முடைய ஸகலதுஃக்கங்களும் கெடும்படியாஶ்ரயிப்போம். [தொண்டீர் வம்மினே] - நம்மோடு ஸகோத்ரிகளா யிருப்பாரடங்கத் திரளுங்கோள். (௪)

---

# ஐந்தாம் பாட்டு.

---

தொண்டீர்!வம்மின் நம்சுடரொளியொருதனிமுதல்வன்
அண்டமூவுலகளந்தவன் அணிதிருமோகூர்
எண்திசையும்ஈன்கரும்போடு பெருஞ்செந்நெல்விளையக்
கொண்டகோயிலைவலஞ்செய்து இங்கு ஆடுதும்கூத்தே.

---

கிடக்கிறது என்றது. தொர்டர-தொடருகைக்காக. சுடர்கோள்சோதியை -மிக்க வொளியையுடைத்தாய் தேஜோமயமான வடிவையுடையவனையென்று ஸம்ப்ரதார்த்தம். "சுடர்கொள்சோதியை" என்றதுக்கு உபாயபரமாகவும் உபேயபரமாகவும் அர்த்தத்வயம் - ஆபத்காலத்திலே இத்யாதிவாக்ய த்வயம். "முனிவர்" என்றதுக்கு - ஸம்ஸாராநுக்ரஹஸமர்த்தரென்று கீழே யருளிச்செய்து, இங்கே ஐஶ்வர்யபரரென்று அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார் - ஐஶ்வர்யார்த்தமாக யத்நம் பண்ணுவாரும் என்று. திருவநந்தாழ்வான் சேர்த்தி சொன்னதுக்கு ஹேது - அநந்யப்ரயோஜநரை இத்யாதி. "படர்கொள்" - படர்த்தியை - விஸ்தாரத்தை, உடைய. "படர்கொள் பாம்பு - பள்ளிகொள்வான்" என்கையாலே - அந்யோந்ய ஸ்பர்ஶத்தால்வந்த விக்ருதியைச் சொல்லுகிறது. 'நின்றருளினான்' என்றது - கூட்டிக்கொள்வது. ஸகலதுஃக்கங்களும் - வழித்துணையில்லையென்கிற துஃக்கமென்றபடி. தொண்டீர் - ஸமவத் விஷயசபலரே! 'சுடர்கொள்சோதியைத் தேவரும் முனிவரும் - இடர்கெட - எம்மைப்போக்களியா யென்றென்றேத்தி - தொடர, படர்கொள் பாம்பணைப்பள்ளி கொள்வானானவன் திருமோகூரிலே நின்றான், அவனடியை - இடர்கெட பரவுதும்; தொண்டீர் வம்மின்' இத்யந்வயஃ. (௪)

ஆ.—(தொண்டீர்.) - ஜகத்துக்கு த்ரிவிதகாரணமும் தானேயாய், அப்ராக்ருதமான அழகையுடையனுமாய், மஹாபலியாலே யபஹ்ருதமான த்ரைலோக்யத்தையும் அளந்துகொண்ட எம்பெருமான் எழுந்தருளியிருக்கையாலே அதிஸ்லாக்யமான திருமோகூரை யாஸ்ரயிக்க வாருங்கோள் என்கிறார்.

ஒ —அஞ்சாம்பாட்டில், அவன் எழுந்தருளி நின்றருளின திருமோகூரை ஆஸ்ரயிக்க வாருங்கோள் என்கிறார்.

[நம் சுடர் ஒளியென்று தொடங்கி] - ஜகத்துக்கு த்ரிவிதகாரணமும் தானேயாய் அப்ராக்ருதமான அழகையுடையவனுமாய் மஹாபலியாலே அபஹ்ருதமான அண்டோதரத்திலே மூன்றுலோகத்தையும் அளந்து கொண்டவனுடைய ஸ்லாக்யமான திருமோகூர் எட்டுத்திக்கும் ஈன்ற கரும்போடு பெருஞ்செந்நெல் விளையும்படி பரிக்ரஹித்தகோயில்.

ப.—அநந்தரம், அஸேஷஜந ஸம்ஸ்லேஷ ஸ்வபாவனான த்ரிவிக்ரமன் வர்த்திக்கிற திருமோகூரில் கோயிலை யநுபவித்து ப்ரீதராவோம், வாருங்கோள் என்கிறார்.

நம் - நமக்கு அநுபாவ்யமாய், சுடர் - நிரவதிகௌஜ்ஜ்வல்யத்தை யுடைத்தான, ஒளி - தேஜோமய திவ்யவிக்ரஹத்தையுடையனாய், ஒருதனிமுதல்வன் - ஜகத்துக்கு நிமித்தோபாதாந ஸஹகாரிரூபமான த்ரிவிதகாரணமும் தானேயாய், அண்டம் - ஸ்ருஷ்டமான அண்டத்துக்கு அகவாயிலுண்டான, மூவுலகு-ஜகத்த்ரயத்தையும், அளந்தவன்-அளந்துகொண்டவன், அணி-அழகிய, திருமோகூர்-திருமோகூரிலே, எண்திசையும்-பார்த்ததிக்குக்கள்தோறும், ஈன் - இனிய, கரும்பொடு - கரும்போடேகூட, பெருஞ்செந்நெல் - பெரியசெந்நெலானது, விளைய-விளையும்படியாக, கொண்ட - பரிக்ரஹித்த, கோயிலை-, இங்கு - இந்தபூமியிலே, வலஞ்செய்து - ப்ரதக்ஷிணம்பண்ணி, கூத்தாடுதும்-ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணுவோம்: தொண்டீர் - ஆசையுடைய நீங்கள், வம்மின் - வாருங்கோள் !

இ.—அஞ்சாம்பாட்டில், அவன் எழுந்தருளி நின்றருளின திருமோகூரை ஆஸ்ரயித்து அநுபவிக்க வாருங்கோள் ! என்கிறார்.

[தொண்டீர் வம்மின்] - பகவத்விஷயத்தில் சபலரானார் வாருங்கோள். [நம் சுடரொளி ஒருதனிமுதல்வன்] - நிரவதிகதேஜோரூபியாய் த்ரிவிதகாரணமும் தானேயானவன். 'நம்' - என்று ப்ரமாணப்ரஸித்தியைச் சொல்லுதல்; தன்வடிவழகையும் ஜகத்தை தன்னோட்டை ப்ராப்தியையும் நமக்கு அறிவித்தவன் என்னுதல். [அண்டம் மூவுலகளந்தவன் - அணிதிருமோகூர்] - அவன்தனக்கு ஆபரணமான தேசமென்னுதல்; ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான தேசமென்னுதல். [எண்திசையும் இத்யாதி] - எட்டுத்திக்கிலும் ஈன்ற கரும்போடே பெருஞ்செந்நெல் விளையும்படி பரிக்ரஹித்த கோயில். கரும்புக்கு நிழல் செய்தாற்போலே இருக்கும் செந்நெல்; "அவன் ஸந்நிதியிலே ஊரும், "ஃஃஃஃஃஃஃஃஃ" என்கிறபடியேயாய்த்தென்கை. [வலஞ்செய்து] - ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ணி. [இங்கு ஆடுதும்கூத்தே]-வந்யும்இது, வடிவழகு அது: ஆனபின்பு, ஆடாதே இருக்கப்போமோ? அங்குப்போனால், "ஃஃஃஃஃ" என்று களிக்குமத்தை இங்கே களிப்போம்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு.அவன் எழுந்தருளிநின்ற திருமோகூரை யாஶ்ரயித்து அநுபவிக்கவாருங்கோளென்கிறார்.

[தொண்டீர்வம்மின்] - பகவத்விஷயத்தில்சபலராயிருப்பார் வாருங்கோள். [நம்சுடரொளியொருதனிமுதல்வன்] - நிரவதிகதேஜோரூபியாய் த்ரிவிதகாரணமும் தானேயானவன். 'நம்' என்று - ப்ரமாணப்ரஸித்தியைச் சொல்லுதல், தன்வடிவழகையும் ஜநகனை தன்னோட்டைப்ராப்தியையும்நமக்கறிவித்தவனென்னுதல்.[அண்டம் மூவுலகளந்தவன்] - அண்டத்துக்குப் புறம்பேயிருக்கிறவன். மஹாபலியாலே யபஹ்ருதமான அண்டோதரத்தில் மூன்றுவகைப்பட்ட லோகங்களையும் அளந்துகொண்டவன். ஸ்ருஷ்டித்துவிடுகையன்றிக்கே, ஸ்ருஷ்டமானஜகத்தை ப்ரபலர்அபஹரித்தால் எல்லை நடந்துகொண்டு ரக்ஷிக்குமவனென்கை.[அணிதிருமோகூர்]-அவன்தனக்குஆபரணமான தேசமென்னுதல், ஸம்ஸாரத்துக்குஆபரணமான தேசமென்னுதல். [எண்திசையும் இத்யாதி]-எட்டுத்திக்கிலுமுண்டான கரும்போடே பெருஞ்செந்நெல் விளையும்படி. [கொண்ட கோயில்] - திருவுள்ளத்தாலே பரிக்ரஹித்த கோயில். கரும்புக்கு நிழல்செய்தாற்போலேயிருக்கும் செந்நெல். அவன்ஸந்நிதியாலே ஊரும்"அகாலபலிநோவ்ருக்ஷா:" (அகாலபலிநோவ்ருக்ஷா:) என்கிறபடியேயாய்த்து. [வலஞ்செய்து] - ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ணி. [இங்குஆடுதும்கூத்தே]-அங்குப்போனால் "அஹமந்நமஹமந்நமஹமந்நம்" (அஹமந்நமஹமந்நமஹமந்நம்) என்று களிக்குமத்தை இங்கே களிப்போம். (ரு)

---

## ஆறாம் பாட்டு.

---

கூத்தன்கோவலன் குதற்றுவல்லசுரர்கள்கூற்றம்
ஏத்தும்நங்கட்கும் அமரர்க்கும் முனிவர்க்கும்இன்பன்
வாய்த்ததண்பணைவளவயல்சூழ்திருமோகூர்
ஆத்தன்தாமரையடியன்றி மற்றிலம்அரணே.

---

அஞ்சாம்பாட்டு —தொண்டீர் இத்யாதி. "கொண்டகோயிலை வலஞ்செய்திங்காடுதும் கூத்து" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - அவன் இத்யாதி.

ஸாநதரனென்றும்காரணபூதனென்றும்ப்ரமாணப்ரஸித்தனென்கை;"நீலதோயத... ஸதைவஸோம்யேதமக்ர ஆஸீத்"இத்யாதி. அண்டத்தில் மூவுலகு என்று விசேஷித்ததுக்குபாவம் - அண்டத்துக்கு இத்யாதி. "அளந்த" என்றத்தால் பலிதம்- ஸ்ருஷ்டித்து இத்யாதி. ஸாமாந்யேந "அணி" என்றதுக்குஅர்த்தத்வயம் - அவன்தனக்கு இத்யாதிவாக்யத்வயம். பெருமைக்கு பாவம் - கரும்புக்கு இத்யாதி. இத்தால் பாவம்-அவன் ஸந்நிதியாலே இத்யாதி. "அகாலபலிநோவ்ருக்ஷாஸ்ஸர்வே... ஸந்து... ப்ருதிவீ..." இதி ப்ரதிப்ரயாணே பரத்வாஜம்ப்ரதி ராமஃ. (கஉஎ-கக) "இங்கு" என்றதுக்குபாவம்-அங்குப்போனால் இத்யாதி. கூத்து - களிப்பின்கார்யமாகையாலே, காரணேகார்யோபசாரம். 'நம்சுடரொளி' என்று தொடங்கி,' 'மூவுலகளந்தவன் – எண்டிசையும்' என்று தொடங்கி, விளையும்படிகொண்ட கோயிலான - அணிதிருமோகூரை - வலஞ்செய்து, இங்கு - கூத்து - ஆடுதும்: தொண்டீர்வம்மின்' இத்யந்வயஃ. (ரு)

ஆ.—(கூத்தன்) - கோபாலனுய், மநோஹாரி சேஷ்டிதங்களையுடையனுய், மிறுக்குச்செய்யும் வலியரான அஸுரர்க்கு ம்ருத்யுவாய், நித்யஸித்தர்க்கும் இன்றாச்ர யிக்கிறநமக்கும் ஒக்கவினியனுய், மிகவுமழகிதான நீர்நிலங்களையுடைய அளவிதான வயல் சூழ்ந்த திருமோகூரிலே பரமாப்தனுயெழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய திரு வடிகளல்லது வேறுநமக்கு அரணில்லையென்கிருர்.

ஒ.—ஆரும்பாட்டில், திருமோகூரில் நின்றருளின பரமாப்ததமனுனவனு டைய திருவடிகளல்லது வேறு நமக்கு அரண் இல்லை என்கிருர்.

[கூத்தன் என்றுதொடங்கி] - கோபாலனுய், மநோஹாரியான சேஷ்டிதங் களையுடையனுய், மிறுக்குச்செய்யும் வலியரான அஸுரர்க்கு ம்ருத்யுவாய், நித்யஸித் தர்க்கும் இன்று ஆச்ரயிக்கிற நமக்கும் ஒக்க இனியனுனவன். [வாய்த்த தண்பணை வளவயல்சூழ் திருமோகூர்] - மிகவும் அழகிதான நீர்நிலங்களையுடைய அளவிதான வயல்சூழ்ந்த திருமோகூரிலே.

ப.—அநந்தரம், ஸ்ரோக்தாக்களுக்கு அநுபவப்ரீதனுய் ஆப்தனுன அவன் திருவடிகளொழிய வேறொன்றை ரக்ஷகமாகவுடையோமல்லோம் என்கிருர்.

கூத்தன் - வல்லாராடினுற்போலே ஓர்மநீயவ்ருத்தியாய், கோவலன் - ரக்ஷ்யவர்க் கத்தைப் பின்சென்று ரக்ஷிக்குமவனுய், குதற்று - பீடகரான குதற்றுதலையுடையராய், வல் - ப்ரபலரான, அசுரர்கள்-கேஸிநேநுகப்ரப்ருதிகளான அஸுர ப்ரக்ருதிகளுக்கு, கூற்றம் - ம்ருத்யுவாய், ஏத்தும் - அநந்யப்ரயோஜநராயேத்துகிற, நங்கட்கும் — (அநநிமாநரான) நமக்கும், அமரர்க்கும் - நித்யாநுபவம்பண்ணுகிற அமரர்க்கும், முனி வர்க்கும்-, இன்பன்-ஆநந்தகனுய், வாய்த்த - ஸம்ருத்தமாய், தண் - குளிர்ந்த, பணை - நீர்நிலங்களாலும், வளவயல் - ஓர்மநீயமானவயலாலும், சூழ்-சூழப்பட்ட, திருமோகூர்- திருமோகூரிலே, ஆத்தன் - (ஆச்ரிதர்க்கு) விச்வஸித்துப்பற்றலாம்படி நிற்கிற ஆப்த தமனுடைய, தாமரை அடிஅன்றி - நிரதிசயபோக்யமான தாமரைபோன்ற திருவடி களையொழிய, மற்றுஅரண்இலம் - வேறொருரக்ஷகமுடையோமல்லோம்.

இ.—ஆரும்பாட்டில், திருமோகூரிலே நின்றருளின பரமாப்ததமன் திரு வடிகளல்லது வேறு நமக்கு அரண் இல்லை என்கிருர்.

[கூத்தன்] - நடக்கப்புக்கால் வல்லாராடினுற்போலே இருக்கை. "வ்ருஷ ஸாதகதிமவஷூதி"-வழித்துணையாய் அவன் முன்னேபோக பின்னே போமிடத்து நடை யழகுதானே ப்ரயோஜநமாயிருக்கை. "ஆடல்பாடலவை மாறினர்தாமே" என்னக் கடவதிறே: இவன் திருக்குழல்வாய்வைத்தபோது அப்ஸரஸ்ஸுக்கள் குழலோசையைக் கேட்டுப் பாட்டுத்தவிர்ந்தார்கள், இவன் நடைகண்டு ஆடல்தவிர்ந்தார்கள். [கோவலன்]- ஆச்ரயித்தாரை ரக்ஷிக்குமிடத்துத் தாழவந்து அவதரித்து ரக்ஷிக்குமவன். பிசாசத் துக்கு மோக்ஷப்ரதனுய் வழிநடத்தினவனிறே. ஆச்ரிதர் சிறுமைபாராதவனிறே. [குதற்றுவல்லசுரர்கள் கூற்றம்] - மிறுக்கைப்பண்ணும் ப்ரபலரான அஸுரர்களுக்கு ம்ருத்யுவானவன். குதற்றுதல் - நெறிதவிர்தல். இன்று ஆச்ரயிக்கிற நமக்கும், "வைகுந்தத்தமரும் முனிவரும்" என்கிற நித்யாச்ரிதர்க்கும் ஒக்க இனியனுனவன். [வாய்த்த இத்யாதி] - அழகிதான நீர் நிலங்களும் அளவிதான வயலும் சூழ்ந்த திரு மோகூரிலே நின்றருளின பரமபந்து. தான் தனக்கில்லாத மரணஸமயத்திலே, "க்ஷமம்

ஸ்மராமிமத்பக்தம்நயாமி" என்னும் பரமாப்ததமன். தன்னை அஞ்சினபோது அவன்பக்கலிலே ந்யஸ்தபரனும்படியான ஆப்ததமன். [தாமரை அடியன்றி] - அநாப்தனாகிலும் விடவொண்ணாதபடியாய்த்துத் திருவடிகளில் போக்யதை. [மற்றிலம் அரணே] - வேறு சிலரை ரக்ஷகமாக உடையோமல்லோம். போக்யதை இல்லையாகிலும் அநாப்தனாகிலும் புறம்பு புகலில்லை யென்கை.

ஈடு. — ஆறும்பாட்டு. திருமோகூரிலே நின்றருளின பரமாப்ததமன் திருவடிகளல்லது வேறு நமக்கு ரக்ஷையில்லையென்கிறார்.

[கூத்தன்] - நடக்கப்புக்கால் வல்லாராடினாற்போலேயிருக்கை. "அக்ரதஃப்ரயயௌராமஃ" (அக்ரதஃப்ரயயௌராமஃ) என்கிறபடியே நடைச்சக்ரவத்துப்பிடிக்கலாயிருக்குமாய்த்து. அவன்முன்னேபோகப் பின்னே போகையாவது - கூத்துக்கண்டு போகையாய்த்து. "ஆடல்பாடலவைமாறினர்தாமே" என்னக்கடவதிறே - அவன்திருக்குழலை வாய்வைத்தபோது அப்ஸரஸ்ஸுக்கள் குழலோசையைக்கேட்டுப் பாடத்தவிர்ந்தார்கள்; அவன் நடையழகைக்கண்டு ஆடத்தவிர்ந்தார்கள். [கோவலன்] - தன்னைத் தாழவிட்டு ஆஶ்ரிதரை ரக்ஷிக்குமவன். பிசாசத்துக்கு மோக்ஷப்ரதனாய் வழி நடத்தினவனிறே. [குதற்றுவல்லசுரர்கள் கூற்றம்] - மிறுக்குக்களைப்பண்ணுகிற்பராய், பெருமிடுக்கரான அஸுரர்களுக்கு ம்ருத்யுவாயுள்ளவன். [ஏத்துமித்யாதி] - இன்றுஆஶ்ரயிக்கிற நமக்கும், "வைகுந்தத்தமரரும் முனிவரும்" என்கிற நித்யாஶ்ரிதர்க்கும்ஒக்க இனியனானவன். [வாய்த்தஇத்யாதி] - அழகிதான நீர்நிலங்களையும் அளவிதான வயலையுமுடைய திருமோகூரிலே நின்றருளின பரமபந்து. தான் தனக்கில்லாத மரணஸமயத்தில் "அஹம்ஸ்மராமிமத்பக்தம்நயாமி" (அஹம்ஸ்மராமிமத்பக்தம்நயாமி) என்னும் பரமாப்ததமன் தன்னை யஞ்சினபோது அவன்பக்கலிலே ந்யஸ்தபரனாய் நிர்பரனும்படியான ஆப்ததமன். [தாமரையடியன்றி] - அநாப்தனாகிலும் விடவொண்ணாதாய்த்துத் திருவடிகளில் போக்யதை. [மற்றிலம்அரணே]- வேறுசிலரை ரக்ஷகராகவுடையோமல்லோம். போக்யதையில்லையாகிலும் விடவொண்ணாதபடி புறம்புபுகலில்லையென்கை. (௬)

---

ஆறும்பாட்டு.—கூத்தன் இத்யாதி. "திருமோகூராத்தன் தாமரையடியன்றி மற்றிலமரண்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - திருமோகூரிலே இத்யாதி.

கூத்தாடுகிறவனையன்றோ கூத்தனென்பது? இவன் அப்படி கூத்தாடுகிறானோ? என்ன - நடக்க இத்யாதி. அப்படியிருக்குமோவென்ன - அக்ரதஃ இத்யாதி. "ப்ரயயௌ" என்ற பதத்திலே நோக்கு. "அக்ரதஃப்ரயயௌராமஸ்ஸீதாமத்யேஸுமத்யமா। ப்ருஷ்டதஸ்துதநுஷ்பாணிர்லக்ஷ்மணோநுஜகாமஹ" இத்யாரண்யகாண்டே (கக-க). நடைச்சக்ரவத்துப்பிடிக்கலாம்படி-நடையழகுக்கு சக்ரவர்த்திவந்தானென்று விருதுபிடிக்கலாம்படியென்றபடி. இத்தால் பலிதம் - அவன் முன்னே இத்யாதி. "வல்லாராடினாற்போலேயிருக்கும்" என்றதுக்கு ப்ரமாணாந்தரம் - ஆடல் இத்யாதி. பெரியாழ்வார் திருமொழி. இதுக்கர்த்தம் - அவன் இத்யாதி. "கோபாலன்" என்றதுக்கு பாவம் - தன்னை இத்யாதி. வழித்துணையாகப் பற்றுகிறவிடத்திலே க்ருஷ்ணப்ரஸங்கமேதுக்கென்ன - பிசாசத்துக்கு இத்யாதி. பிசாசத்துக்கு - கண்டாகர்ணனுக்கு. குதற்று - குதறுதலையுடையராய். குதற்றல் குதறுதலாய், நெறிதவிர்தல்; அதாவது - உன்மார்க்கவர்த்தித்வம். தண் - குளிர்ந்த. வளவயல் - ஸ்ப்ருஹணீயமானவயல். இத்தால் பாவம் - தான்தனக்கு இத்யாதி. விவரணம் - தன்னையஞ்சின இத்யாதி. "தாமரையடி" என்றதுக்கு பாவம் - அநாப்தன் இத்யாதி. இத்தால் பலிதம் - போக்யதை இத்யாதி. க்ரமேணாந்வயஃ. (௬)

## ஏழாம் பாட்டு.

மற்றிலம்அரண்வான்பெரும்பாழ்தனிமுதலாச்
சுற்றும்நீர்படைத்துஅதன்வழித்தொல்முனிமுதலா
முற்றுந்தேவரோடுஉலகுசெய்வான்திருமோகூர்
சுற்றிநாம்வலஞ்செய்ய நம்துயர்கெடும்கடிதே.

ஆ.—(மற்றிலம்அரண்.)-பெரியதாய் ஒப்பின்றிக்கேயிருக்கிற ப்ரக்ருதியைக் காரணமாகக்கொண்டு ஆவரணஜலத்தைப்படைத்து அவ்வழியாலே ப்ரஹ்மாமுதலான தேவர்களோடுகூடின எல்லாலோகங்களையும் உண்டாக்குகையாலே, நம்முடைய ரக்ஷணம் தனக்கு அவர்ஜநீயமாம்படியான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற திருமோகூரைச்சுற்றி நாம் வலஞ்செய்ய, அப்போதே நம்முடைய ஸமஸ்தது:க்கங்களும் கெடும் என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், ஸர்வகாரணமாகையாலே நம்முடைய ரக்ஷணம் தனக்கு அவர்ஜநீயமாய்படியானவனுடைய திருமோகூரை ஆஶ்ரயிக்கவே நம்முடைய ஸமஸ்தது:க்கங்களும் அப்போதே கெடும் என்கிறார்.

[மற்றிலம் அரண்] - வேறுஅரணை யுடையோமல்லோம். [வானென்று தொடங்கி] - பரிச்சேதிக்க வொண்ணாதபடி பெரியதாய் ஒப்பின்றிக்கேயிருக்கிற ப்ரக்ருதியைக் காரணமாகக்கொண்டு ஆவரணஜலத்தைப் படைத்து, அவ்வழியாலே ப்ரஹ்மா முதலான தேவர்களோடுகூடின எல்லாலோகத்தையும் உண்டாக்கினவனுடைய திருமோகூரை.

ப.—அநந்தரம், அகிலஜகத்ஸ்ரஷ்டாவான ஸர்வேஶ்வரன் வர்த்திக்கிற திருமோகூரைப்பற்றி அநுகூலவ்ருத்திகளைப்பண்ண, நம்முடையது:க்கம் சடக்கெனப் போம் என்கிறார்.

தனி - ("ஜ்ஞாநைகோஷ்" என்கிறபடியேஉத்பத்த்யாதிகளில்லாத) வைலக்ஷண்யத்தையுடைத்தாய், (நாநாவித †கார்யங்களுக்குத் தான் ஏககாரணமாய்), வான் - (ஸமஸ்தகார்யங்களும் ஸ்வைகதேசத்திலேயாம்படி) நிரதிஶயமஹத்தையையுடைத்தாய், பெரு - அசேஷகார்யத்தையும் உண்டாக்குகைக்கு யோக்யதையான, பாழ்முதலா- ப்ரக்ருதிமுதலாகக்கொண்டு, சுற்றும் - எங்குமொக்க வ்யாப்தமான, நீர் - காரணஜலத்தை, படைத்து - ஸ்ருஷ்டித்து, அதன்வழி - அந்தவழியாலே, தொல் - (அண்டத்துள்வாயிலே ஸ்ருஜ்யஜகத்துக்கு முற்பாடனாகையாலே) பழையனாய், முனிமுதலா - ஸ்ருஷ்டிப்ரகார மநநசீலனான ப்ரஹ்மாமுதலாக, முற்றும் தேவரோடு - ஸமஸ்ததேவதைகளோடுகூடின, முற்றும்உலகு - ஸகலலோகங்களையும், செய்வான் - பண்ணுமவனுடைய, திருமோகூர்- திருமோகூரை, சுற்றி வலம் நாம் செய்ய - ப்ரதக்ஷிணம்முதலான அநுகூலவ்ருத்திகளை (ஹோமரூபேண)நாம் பண்ண, நம் - நம்முடைய, துயர் - தனிமையால்வந்த து:க்கம், கடிது - சடக்கென, கெடும் - போம்; (ஆதலால்), மற்றுஅரண் இலம் - மற்று ரக்ஷகமுடையோ மல்லோம்.

இ.—ஏழாம்பாட்டில், நம்முடைய ரக்ஷணம் தனக்கு அவர்ஜநீயமான உத்பாதகன் வர்த்திக்கிற திருமோகூரை ஆஶ்ரயிக்கவே நம்முடைய து:க்கங்கள் அப்

† கைங்கர்யங்களுக்கு என்று காணப்படுகிற பாடம் பொருத்தமுள்ளதாகத் தோன்றவில்லை.

போதே போம் என்கிறார். [மற்றிலம் அரண்] - இவனையொழிய வேறு ரக்ஷகரில்லை. [வான்பெரும்பாழ் தனிமுதலா] - கார்யஜாதமழிந்தாலும் அழியாமையாலே வலிதாய், அபரிச்சிந்நமாய், ஜோமமோக்ஷங்களை விளைப்பதாய், அத்விதீயமான மூலப்ரக்ருதி தொடக்கமாக. [சுற்றுநீர் படைத்து] - "அப ஏவ ஸஸர்ஜாதௌ" என்கிறபடியே, ஆவரணஜலத்தை ஸ்ருஷ்டித்து. [அதன்வழித்தொல் முனிமுதலா] - அவ்வழியாலே தேவாதிகளைப்பற்றப் பழையனாய் மநநசீலனான சதுர்முகன் தொடக்கமாக. [முற்றும் தேவரோடு உலகுசெய்வான் திருமோகூர்] - எல்லா தேவஜாதியோடுங்கூட எல்லா லோகங்களையும் உண்டாக்குமவன் வர்த்திக்கிற திருமோகூர். [சுற்றி நாம் வலஞ் செய்ய] - நாம் சென்று விடாதே ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ண. [நம் துயர் கெடுங்கடிதே] - "வழித்துணையில்லை" என்று நாம்படுகிற து:க்கங்கள் சடக்கெனப்போம். "அத ஸோ அபயம் கதோ பவதி" என்னக்கடவதிறே. ஆனபின்பு, மற்றிலம் அரண்.

ஈடு.—ஏழாம்பாட்டு. நம்முடையரக்ஷணம் தனக்குஅவர்ஜநீயமான உத்பாதகன் வர்த்திக்கிற திருமோகூரை யாஶ்ரயிக்கவே, நம்முடையது:கங்கள் அப்போதேபோமென்கிறார்.

[மற்றிலம்அரண்] - வேறோர்அரணையுடையோமல்லோம். அவன்தான் ரக்ஷகனாகவல்லனோவென்னில்; இதுவன்றோ அவன்படியென்கிறது, மேல். [வான் இத்யாதி]- இவ்வருகுண்டான கார்யவர்க்கமடங்கலும்அழிந்தவன்றும் தானழியாமையாலேவலிதாய், அபரிச்சிந்நமாய், போகமோக்ஷங்களை விளைப்பதான அத்விதீயமான மூலப்ரக்ருதிதொடக்கமாக. [சுற்றுநீர்படைத்து] - "அப ஏவ ஸஸர்ஜாதௌ" (அபஏவஸஸர்ஜாதௌ) என்கிறபடியே ஆவரணஜலத்தை ஸ்ருஷ்டித்து. [அதன்வழித்தொல்முனிமுதலா] - அவ்வழியாலே, தேவாதிகளைப்பற்றப் பழையனாய் மநநசீலனான சதுர்முகன்தொடக்கமாக. [முற்றுந்தேவரோடுஉலகுசெய்வான்திருமோகூர்] - எல்லா தேவஜாதியோடேங்கூட எல்லா லோகங்களையும் உண்டாக்குமவன் வர்த்திக்கிற திருமோகூர். [சுற்றிநாம்வலம்செய்ய] - நாம்சென்றுவிடாதே ப்ரதக்ஷிணாதிகளைப்பண்ண. [நம்துயர்கெடும்கடிதே] - "வழித்துணையில்லை" என்று நாம் படுகிறது:கம் சடக்கெனப்போம் "அத ஸோ அபயம் கதோ பவதி"(அதஸோபயம்கதோபவதி) என்னக்கடவதிறே; ஆனபின்பு, மற்றிலம்அரண்.(எ)

---

ஏழாம்பாட்டு.—மற்றிலம் இத்யாதி. உத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - நம்முடைய இத்யாதி.

"வான்" என்று - வலிதாய், நித்யமாயென்றபடி. அபரிச்சிந்நமாய் என்றது - "அநந்தஸ்யாந்தஸ்யாஜ:" என்றத்தைப்பற்ற. நித்யமான மூலப்ரக்ருதியை ஸ்ருஷ்டிக்கையாவது - தமோக்ஷராவ்யக்தரூபேண பரிணமிப்பிக்கை. சுற்றுநீர் - ஆவரணஜலம். "அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத் । தததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரபம்" இதி மநுஸ்ம்ருதௌ (க-அ). அதன்வழி - அவ்வழியாலே. "அதன்வழி" என்று - பூதஸ்ருஷ்டி, பஞ்சீகரணம், அண்டஸ்ருஷ்டி முதலானவற்றைச் சொல்லுகிறது. தொன்மை - பழமை. "முற்றும்" என்றது - * தேவர்க்கும் * உலகுக்கும் விசேஷணம். சுற்றி - விடாதே. அவனையாஶ்ரயித்தால் து:க்கம் போமோவென்ன - அதஸோஅபயம் இத்யாதி. தைத்திரீயகே. யாதொருபோது ப்ரஹ்மநி ஸ்தானத்தை யடைகிறான், அநந்தரம் அபயங்கதனாவன் என்று ஶ்ருதிக்கர்த்தம். ப்ரதிஷ்டா - ஸ்தானம். 'வான்பெரும் பாழ்' என்றுதொடங்கி, 'உலகுசெய்வானுடைய திருமோகூரை - நாம் - சுற்றி - வலஞ்செய்ய - கடிது - நந்துயர்கெடும்; ஆகையாலே, அரண் - மற்றிலம்' இத்யந்வய:. (எ)

## எட்டாம் பாட்டு.

துயர்கெடும்கடிதடைந்துவந்து அடியவர்!தொழுமின்
உயர்கொள்சோலை ஒண்தடமணியொளிதிருமோகூர்
பெயர்களாயிரமுடைய வல்லரக்கர்புக்கழுந்தத்
தயரதன்பெற்ற மரதகமணித்தடத்தினையே.

ஆ.— (துயர்கெடும்) - பரமப்ராப்ய ஸூதனை அவனுக்குங்கூட போக்யமான திருமோகூரே நமக்கு ப்ராப்யம்; ஆதலால், ப்ரதிகூலரெல்லாரும் து:க்கஸாகர நிமக்நராம்படி தயரதன்பெற்ற ஸமஸ்தகல்யாணகுண விசிஷ்டமான மரதகமணித்தடத்தினைத் திருமோகூரிலே ஈண்டச்சென்று பஜியுங்கோள் என்கிறார்.

ஒ.— எட்டாம்பாட்டில், திருமோகூரில் நின்றருளின ஆண்பிள்ளையான தசரதாத்மஜனை ஆஶ்ரயிக்க நம்முடைய து:க்கங்களெல்லாம்போம் என்கிறார். [அடைந்து] - கிட்டி. [உயர் என்றுதொடங்கி] - உயர்ந்த சோலையாலும் அழகிய தடாகங்களாலும் அலங்க்ருதமான ஒளியையுடைய திருமோகூரிலே. [பெயர்கள் ஆயிரம் என்று மேலுக்கு] - ஐஶ்வர்யவீர்யாதிகளுக்கு வாசகமான பல பெயர்களையுடைய வலியராக்ஷஸர்கள் புக்கழுந்தும்படி தயரதன்பெற்ற மரதகமணிபோலேயிருக்கிற தடாகத்தினை.

ப.— அநந்தரம், உங்களுடைய ஸகல க்லேஶமும் தீரும்படி ஶீலஶீதளமான தசரதாத்மஜதடாகத்தைக் கிட்டி பஜியுங்கோள் என்கிறார்.

உயர்கொள் - உயர்த்தியையுடைய, சோலை - சோலைகளையும், ஒண் - விலக்ஷணமான, தடம் - தடாகங்களையும், அணி - அலங்காரமாக வுடைத்தாய், ஒளி - அத்யுஜ்ஜ்வலமான, திருமோகூர் - திருமோகூரிலே, (ஜகத் வ்யாபகத்வத்தால்வந்த), ஆயிரம் - அஸங்க்யாதமான, பெயர்கள்உடைய - விருதுபேரையுடையராய், வல் - ப்ரபலரான, அரக்கர் - ராக்ஷஸர், (விபீஷணப்ரப்ருதிகளைப்போலே துறையறிந் திழியாமையாலே), புக்கழுந்த - புக்கழுந்தும்படியாக, தயரதன்பெற்ற - தசரதன்பெற்ற, (விஷஹரமுமாய் ஆபரணமுமான), மரதகமணி - மரகதமணிபோலே ஶ்யாமளமான நிறத்தையுடைய, தடத்தினை - தடாகத்தை, அடியவர் - * ஶரண்யமுபாகதரான நீங்கள், வந்து அடைந்து - வந்துகிட்டி, தொழுமின் - தொழுங்கோள். துயர் - உங்கள்அஸஹாயத்தாலே க்லேஶமானது, கடிது - சடக்கென, கெடும் - நசிக்கும். விஷஹரமுமாய் ஆபரணமுமான மரதக த்ருஷ்டாந்தத்தாலே ப்ரதிகூல நிரஸநமும் அநுகூலர்க்கு ஆஶ்ரயமுமாம் என்று கருத்து.

இ.— எட்டாம்பாட்டில், திருமோகூரிலே நின்றருளின ஆண்பிள்ளையான தசரதாத்மஜனை ஆஶ்ரயிக்க நம்முடைய து:க்கமெல்லாம்போம் என்கிறார்.

[துயர்கெடும்கடிது] - நாம் அபேக்ஷியாதிருக்க து:க்கமானது சடக்கெனத் தானே போம். [அடைந்துவந்து] - வந்தடைந்து; வந்துகிட்டி. [அடியவர் தொழுமின்] - "வழித்துணையில்லை" என்று க்லேஶப்படுகிற நீங்கள் ஆஶ்ரயியுங்கோள். [உயர்

கோள் இத்யாதி] - உயர்ந்த சோலைகளாலும் அழகிய தடாகங்களாலும் அலங்க்ருதமான ஒளியையுடைய திருமோகூர். ஒளி - ஸமுதாயஶோபை. சோலையைக் கண்டால் வடிவை ஸ்மரிக்கலாயிருக்கும், தடாகங்களைக்கண்டால் வடிவில் ஶ்ரமஹரதையை நினைக்கலாயிருக்கும். [பெயர்கள் ஆயிரமுடைய] - ஈஶ்வரனுக்கு ரக்ஷணத்தாலே ஆயிரம் திருநாமம் உண்டாயிருக்குமாபோலே, இவர்களுக்கு வைரஸ்யத்தாலே அநேகம் பெயரையுடையராயிருப்பர்கள். "யஜ்ஞஶத்ரு, ப்ரஹ்மஶத்ரு" என்றிறே பெயர்கள். [வல்லரக்கர் புக்கழுந்த] - பெருமிடுக்கரான அஸுரர்கள் புக்கழுந்தும்படி, சக்ரவர்த்திபெற்ற நீலமணிபோலேயிருக்கிற தடாகத்தினை - அடைந்துவந்து - அடியவர் தொழுமின். "பதிதருமருவாபீ வாரிவத்ஸர்வபோக்ய" என்கிறபடியே அநுகூலர்க்கு ரக்ஷகமாய், "காகுத்ஸ்த பாதாலமிவ துஸ்தர:" என்கிறபடியே உகவாதார்க்கு நாஶகமாயிறே யிருப்பது. "ஶோகஸந்தாபஜநிதோ மோகநாஶந..." என்று பக்ஷியைப் போகவிட்டாரிறே

ஈடு.—எட்டாம் பாட்டு. திருமோகூரிலே நின்றருளின ஆண்பிள்ளையான தசரதாத்மஜனை ஆஶ்ரயிக்க நம்முடைய துக்கமெல்லாம் போம் என்கிறார்.

[துயர்கெடும்கடிது] - நாம் அபேக்ஷியாதிருக்கத் தன்னடையே சடக்கெனப் போம் நம்முடைய துக்கங்கள். [அடைந்துவந்து] - வந்தடைந்து; வந்துகிட்டி. [அடியவர்தோழுமின்] - "வழித்துணையில்லை" என்று க்லேஶப்படுகிற நீங்கள் ஆஶ்ரயியுங்கோள். [உயர் இத்யாதி] - உயர்ந்தசோலைகளாலும் அழகிய தடாகங்களாலும் அலங்க்ருதமான ஒளியையுடைய திருமோகூர். †(ஒளி - ஸமுதாயஶோபை.) சோலையைக்கண்டால் அவன் வடிவுக்கு ஸ்மாரகமாயிருக்கும், தடாகங்களைக்கண்டால் அவன்வடிவில் ஶ்ரமஹரதைக்கு ஸ்மாரகமாயிருக்கும். * வாசத்தடம்போல் வருவானிறே அவன்தான். [பெயர்களாயிரமுடைய]-ஈஶ்வரன் ரக்ஷித்துப் படைத்த பெயர்களோபாதி போருமாய்த்து இவர்கள் பரஹிம்ஸைபண்ணிப்படைத்த பெயர்; "யஜ்ஞஶத்ரு, ப்ரஹ்மஶத்ரு" என்றாற்போலேயிறே இவர்கள் பெயர். [வல்லரக்கர்புக்கழுந்த] - பெருமிடுக்கரான அஸுரர்கள் புக்கழுந்தும்படி [தயரதன் இத்யாதி] - சக்ரவர்த்திபெற்ற நீலமணிபோலே யிருக்கிற தடத்தை - அடைந்துவந்து அடியவர் தொழுமின். "பதிதருமருவாபீ வாரிவத்ஸர்வபோக்ய" (பதிதருமருவாபீ வாரிவத்ஸர்வபோக்யம்) என்கிறபடியே அநுகூலர்க்கு ரக்ஷகமாய், "காகுத்ஸ்த பாதாலமிவ துஸ்தர:" (காகுத்ஸ்தபாதால

எட்டாம்பாட்டு.—துயர் இத்யாதி. "திருமோகூர் - தயரதன்பெற்ற மரதக மணித் தடத்தை - வந்தடியவர்தொழுமின்: துயர்கெடும் கடிது" என்றவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை - திருமோகூரிலே இத்யாதி.

"கடிது - துயர்கெடும்" என்றதுக்கர்த்தம் - நாம் இத்யாதி. உயர்த்தியையுடைய சோலைகளாலும் அழகிய தடாகங்களாலும் அலங்க்ருதமாய் ஒளியையுடைத்தான திருமோகூரென்று ஶப்தார்த்தம். ஒளி - ஸமுதாயஶோபை. "மரதகமணித்தடம்" என்றத்தைக் கடாக்ஷித்து, இது சொன்னதுக்கு பாவம் - சோலையை இத்யாதிவாக்யத்வயம். அப்படியிருக்குமோவென்ன - வாசத்தடம் இத்யாதி. "ஸஹஸ்ரநாமா..." என்று - ஆயிரம்பேருள்ளது அவனுக்கன்றோவென்ன - ஈஶ்வரன் இத்யாதி. அந்தப்பேர்களேதென்ன - யஜ்ஞசத்ரு இத்யாதி. இவனைத் தடாகமாக ரூபித்ததுக்கு பாவம் த்வேதா அருளிச்செய்கிறார் - பதிதரு இத்யாதி. "ஸம்ஹாரிணா..."

† குண்டலிதம் ப்ரக்ஷிப்தம்.

